# THE AMERICAN COLLEGE

*By* S. J. SAVARIRAYAN, M.A.,

*Principal, The American College, Madurai.*

The American College which has just completed 75 years of outstanding educational work is one of those institutions which have added lustre to the City of Madurai. The thousands of students that have passed out of its portals will bear testimony to the unique service rendered by it and the high principles that have characterised the founders and those that have steered its destinies

Lt. Col. Dr. Sir A. Lakshmanaswami Mudaliar, the Vice-Chancellor of the University of Madras wrote as follows when greeting the College when it celebrated its 75th Anniversary.

"The American College has made a notable contribution in the Southern-most districts for the spread of higher education and for the inculcation of those disciplines which are so essential for the success of its alumni and for the future of the country. Many distinguished Americans have been associated with this college, whom I had the privilege of knowing personally. The sound principles on which it works, the earnestness with which it devotes itself to the cause of the alumni entrusted to its care are features which are well worth emulation."

The Rev. Dr. A. J. Boyd, Principal Madras Christian College, Tambaram on the same occasion sent the following message:—

"The American College has made a notable contribution to education in South India, and after so many years its almuni must be a large and influential body. The need of such service as the College offers will in future be even greater than it has been in the past. The crying need of the country is for leadership that shall be not only intelligent but also high principled and unselfish. If the College can send out men of ability and character who faithfully use such opportunities as may come to them as opportunities of service it will be helping to meet the country's needs at their deepest level. May this ideal, which is the ideal of all Christian Colleges be amply fulfilled in the coming years".

It is our earnest hope that the citizens of Madurai will help to see that the College maintains high standards of behaviour and academic work.

# மதுரை நகரசபை அங்கத்தினர்கள்



ஸ்ரீ ராணி. அ. சுப்பராம்
(தலைவர்) 30வது வார்டு





ஸ்ரீ A. பொன்னையா
(உபதலைவர்) 3வது வார்டு





ஸ்ரீ S. கருப்பையா
1வது வார்டு





ஸ்ரீமதி ராஜம்மாள்
2வது வார்டு





ஸ்ரீ M. செல்லையா
2வது வார்டு

# மதுரை நகரசபை அங்கத்தினர்கள்



ஸ்ரீ T. செல்லச்சாமி
3வது வார்டு





ஸ்ரீ முகம்மது இஸ்மாயில்
4வது வார்டு



ஸ்ரீ P.C.M. பாலகிருஷ்ணன் செட்டியார்
5வது வார்டு



ஸ்ரீ V. S. ராமசுப்ரமணியன்
6வது வார்டு



ஸ்ரீ S. காமராஜ்
7வது வார்டு





ஸ்ரீ S. அழகிரிசாமி
8வது வார்டு

# மதுரை நகரசபை அங்கத்தினர்கள்



ஸ்ரீ S. முத்து
9வது வார்டு



ஸ்ரீ M. சின்னக்கருப்பத் தேவர்
10வது வார்டு



ஸ்ரீ A. மருதவீரன்
11வது வார்டு





ஸ்ரீ SP. ஆண்டி
11வது வார்டு



ஸ்ரீ M. மாரியப்பன் செட்டியார்
13வது வார்டு



ஸ்ரீ R அழகர்சாமி
14வது வார்டு

# மதுரை நகரசபை அங்கத்தினர்கள்



ஸ்ரீ V. ராஜகோபால ஐயங்கார்
15வது வார்டு





ஸ்ரீ E. ரெங்கசாமி
16வது வார்டு



ஸ்ரீ N. R. ராமகிருஷ்ணன்
17வது வார்டு



ஸ்ரீ M. சீனிவாசன்
18வது வார்டு



ஸ்ரீ G. சுப்பையா பிள்ளை
19வது வார்டு





ஸ்ரீ V. K. தாஸ்
20வது வார்டு

# மதுரை நகரசபை அங்கத்தினர்கள்



ஸ்ரீ புளியடி. R. ராமலிங்கய்யர்
21வது வார்டு



ஸ்ரீ K. S. குழந்தைவேல் நாடார்
22வது வார்டு



ஸ்ரீ P. K. துரைசாமி
23வது வார்டு





ஸ்ரீ M. கல்யாணிசுந்தரம் பிள்ளை
24வது வார்டு



ஸ்ரீ அன்னு. S. ரெங்கன்
25வது வார்டு



ஸ்ரீ A. N. விஸ்வநாதன்
26வது வார்டு

# மதுரை நகரசபை அங்கத்தினர்கள்



ஸ்ரீ P. V. விஜயகமூர்த்தி நாடார்
27வது வார்டு





ஸ்ரீ K. S. ராமகிருஷ்ணய்யர்
28வது வார்டு



ஸ்ரீ கொண்டா. N. ராமய்யர்
29வது வார்டு



ஸ்ரீ A. G. சுப்பராமன்
31வது வார்டு



ஸ்ரீ S. K. சேதுராஜ பிள்ளை
32வது வார்டு





ஸ்ரீ L. B. ராஜாராம அய்யர்
33வது வார்டு

# திருவிழாக்களும் அவற்றின் பயனும்

[ ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் திருவருள் தவயோக சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள், திருஞானசம்மந்த சுவாமிகள் ஆதீனம் ]



பொதுவாக உற்றார் உறவினர் ஊரார் முதலியோர் ஒன்றுகூடி வாழ்க்கையிற் சிறந்த காரியங்கள் நடந்த நாட்களைப் பலவிதமான கொண்டாட்டங்களால் நினைப்பூட்டி மகிழ்கின்ற வைபவமே விழா எனப் பெறும். அப்படிக் கொண்டாடப் பெறுகின்ற கொண்டாட்டங்களால் மக்கள் இரண்டு முக்கிய பயன்களைப் பெறுகின்றனர் ஒன்று அந்த நிகழ்ச்சி முதன் முதலாக நடந்தபொழுது வாழ்ந்திருந்த மக்கள் நேரிற் கண்டு மகிழ்ந்து அனுபவித்த காரியங்களை அப்பொழுது வாழ்ந்திராத பின் சந்ததியாரும் ஓரளவு அறிந்து மகிழ்ந்து அந் நிகழ்ச்சியை நினைப்பூட்டுமாறு செய்கின்றது. மற்றது, அக்கொண்டாட்டத்திற் செலவாகின்ற பணமெல்லாம் பல தொழிலாளிகளுக்கும், விவசாயிகளுக்கும், ஏழை மக்களுக்கும் பங்கீடாகுமாறு செய்கின்றது.

கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள் எங்கும் செறிந்த ஆண்டவன் உருவத் திருமேனி தாங்கித் தீயவர்களை அடக்கி ஆண்டு நல்லவர்களைப் பாதுகாத்துப் பக்குவமுள்ளவர்களுக்குப் பேரின்பப் பெருவாழ்வும், பெறுதற்கரிய பேறுகளும் கொடுத்த நிகழ்ச்சிகளின் கொண்டாட்டங்களாகும். அவை எல்லா மக்களையும், ஆண்டவனது முடிவில்லாத ஆற்றலையும் பேரருள் உடைமையையும், எளிதில் உணரும்படியாகச் செய்து யாவரது உள்ளத்திலும் தெய்வ பக்தி ஊற்றெடுக்கச் செய்யும் தன்மை வாய்ந்தன.

மனிதர்கள் ஓரிடத்தில் நடித்துக் காட்டிய வரலாற்றை ஒரு திரைப்படத்தில் பார்க்கின்றபொழுது, திரையில் தோன்றுவது உயிரற்ற படக்காட்சியே யானாலும், அதைப் பார்க்கின்ற நேரத்தில், பார்ப்பவரின் உள்ளங்களை அக்காட்சி எத்தனை எத்தனை விதங்களில் பரவசப்படும்படியாகச் செய்கின்றது என்பதை எவரே மறுக்கக் கூடும்? அழுகின்றவர்கள், சிரிக்கின்றவர்கள், பயப்படுகின்றவர்கள், காதலிக்கின்றவர்கள், பக்தி நெறியில் நிற்கின்றவர்கள ஆகிய நடிகர்கள் பலரும் தாம் தாம் செய்கின்ற செய்கைகளினால் பார்க்கின்றவர்களின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு அந்தந்த நிலை அவரவரது உள்ளத்தில உண்டாகும்படி செய்துவிடுகிறார்கள் அல்லவா? வெறும திரைப்படம்தானே என்ற உணர்ச்சியற்று, உண்மை நிகழ்ச்சிக்குரிய அழுகை, சிரிப்பு, பயம, காதல், பக்தி முதலிய மெய்ப்பாடுகள உண்டாக்குவதே போல, திருவிழாக் காலங்களில் உயிரற்ற வாகனங்களும, செம்பினால் செய்த உருவத் திருமேனிகளும கொண்டு ஆண்டவன் செய்த திருவிளையாடல்களை நடத்திக் காட்டும்பொழுதும், வீதி உலா வரும்பொழுதும், அவை பழமையான நிகழ்ச்சிகளை நினைப்பூட்டும் காரியங்களென்பதே இல்லாமல், உண்மை நிகழ்ச்சிக்குரிய மெய்ப்பாடுகளைக் காண்போர் உள்ளத்தில் உண்டாக்குகின்றன. ஒரு நாடக மேடையில், அல்லது ஒரு திரைப்படத்தில் ஒரு குறுகிய எண்ணிக்கையுள்ள மக்களே கண்டு ஆனந்திக்க முடியும். ஆனால் நம்முடைய முன்

ஞர்கள் அவர்களுடைய பரந்த நோக்கத்துடன், திருவிழாக்களை ஒவ்வொரு ஆலயங்களிலும் பல ஊர்களிலிருந்தும் வரக்கூடிய மக்கள் யாவரும் ஏககாலத்தில் கண்டு ஆனந்திக்குமாறும், பலபல இடங்களில் பலபல மண்டகப்படிகளையும், கட்டளைகளையும் ஏற்படுத்தி, அந்த நகரம் முழுவதையுமே ஒரு நாடகமேடையாக அலங்கரிக்கும் தன்மையில் தரையில் (பூமியில்) அமைத்திருக்கிறார்கள்.

ஒவ்வொரு ஆலயத்திலும் முக்கிய திருவிழாக்களெல்லாம் பௌர்ணமியில் தீர்த்தவாரி அமையுமாறு செய்திருப்பது எல்லோரும் அறிந்ததே. ஆனால் வானத்தில் உள்ள சூரியன், சந்திரன் முதலிய கிரகங்களுக்கும், நக்ஷத்திரங்களுக்கும், மக்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதும், இன்ன இன்ன நாட்களில் தீர்த்தம் ஆடுவதும், இன்ன இன்ன நாட்களில் விரதம் அனுட்டிப்பதும், நிறுத்துவதும், இன்ன இன்ன நன்மைதரும் என்பதையும் நன்கு உணர்ந்தவர்கள் மிகச் சிலரே. பௌர்ணமியில் கடல் அலைகள் கொந்தளிப்புடையதாகவும், வேகமுடையதாகவும் இருக்குமென்பதை கடல் மீன் பிடிக்கிறவர்களும், கடற்கரையை ஒட்டி வாழுகின்ற மக்களுமே அறிவர். ஆனால் பொதுவாக எந்த வியாதியும், முக்கியமாக விஷக் கடிகளும் பௌர்ணமி, அமாவாசை நாட்களில் கொடுரமாகவும், உடல் வீக்கம் கொடுக்கக்கூடியதாகவும் ஏற்படுவதைப் பெரும்பாலர் அறிவர். இவற்றிலிருந்து பௌர்ணமி திதியன்று செய்கின்ற வழிபாடு சிறந்த பயனைத் தருமென்பதை ஒருவாறு உய்த்துணரலாம். அதனாலேயே உத்தராயண காலமாகிய தை மாதத்திலிருந்து ஒவ்வொரு பௌர்ணமி திதியும் ஒவ்வொரு சிறந்த நாளாக ஆலயங்களில் அமைத்திருக்கிறார்கள். தைப் பூசம், மாசி மகம், பங்குனி உத்தரம், சித்திரைச் சித்திரை, வைகாசி விசாகம், ஆவணி அவிட்டம், கார்த்திகைக் கார்த்திகை முதலியன பௌர்ணமி திதிகளில் வருவதற்கும் காரணம். அவற்றுள் புது வருஷ ஆரம்பமாகிய சித்திரை மாதத்தில் வருகின்ற சித்திரைத் திருவிழா மிகவும் சிறப்புடையது.

இவ்விதத் திருவிழாக்கள் தென் இந்தியாவிலுள்ள சைவ, வைஷ்ணவ ஆலயங்களில் நடைபெறுவதுபோல் இவ்வுலகத்தில் வேறு எங்கேயும் காண முடியாது. அதிலும் சமய குரவர்களால் பாடல்பெற்ற 274 சிவ ஸ்தலங்களுள் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றாலும் சிறந்த ஸ்தலமும், நகரத்தின் மத்தியில ஆலயமும், அதன் வானளாவிய கோபுரங்களும், அதைச் சுற்றிலும் ஆடிவீதி என்றும், சித்திரை வீதி என்றும், ஆவணி மூலவீதி என்றும், மாசி வீதி என்றும், வெளிவீதி என்றும் மாதங்களின் பெயரால் அமைந்த திருவீதிகளும் நான்கு லக்ஷத்திற்கு அதிகமான ஜனத்தொகையும், திருவிழாக் காலங்களில் மேற்கொண்டு இரண்டு லக்ஷத்திற்கு அதிகமான மக்களை வெளியூர்களிலிருந்து வரவேற்கும் கவர்ச்சியுடையதும், 12 மாதங்களில திருவிழாக்கள் கொண்டதுமான மதுரைமாநகரம் போன்ற புண்ணிய ஸதலம் உலகத்திலேயே வேறு கிடையாது. இவ்வளவு சிறப்பு வாய்ந்த இந்த மதுரையம்பதியிலே நடக்கின்ற பல திருவிழாக் காலங்களிலும் திரள் திரளாக வருகின்ற மக்களுக்கு வேண்டிய இன்றியமையாத பல வசதிகளையும், மதுரை நகரசபை திறம்பட ஆற்றிவருவது யாவராலும் போற்றுதற்குரிய ஓர் அரிய செயலாகும் அதிலும் மக்களின் நன்மையை உத்தேசித்து அவர்கள் அமைத்திருக்கும் தண்ணீர்ப் பந்தல்கள், சுகாதார விடுதிகள், வைத்திய விடுதிகள், விளக்கு வசதிகள், தூசி கிளம்பா

மல் வீதிகளைச் சுத்தம் செய்யவும், தண்ணீர் தெளிக்கவும் ஏற்பாடுகள், வழிதப்பிய குழந்தைகளைக் கண்டுபிடிக்கும் நிலையங்கள் முதலியன சிறந்த முறையில் அமைத்து நடத்துதல் குறிப்பிடத்தக்க சேவைகளாகும்.

பொதுமக்கள் எல்லோரும் தாங்கள் தூய்மையுடையவர்களாகவும், பொது இடங்களை அசுத்தம் செய்யாத முறையில் நடந்துகொள்கிறவர்களாகவும் இருந்தால், தங்கள் தங்களது நலத்திற்கும், பொதுமக்களின் சுகாதாரத்திற்கும் பெரியதோர் நன்மை புரிந்தவர்களாவார்கள்.

ஒவ்வொருநாளும் பாடல் பெற்ற ஸ்தலங்களில் சென்று வழிபட முடியாதவர்கள், சிறந்த திருவிழாக் காலங்களில் தரிசனம்செய்வதால் மற்றைய நாட்களிலும் வழிபாடுசெய்ததின் பயனைப் பெறுகின்ற பேறு பெறுவதாலேயே, பக்தியுள்ள மக்கள் எவ்வளவோ அரும்பாடுபட்டு தூரந் தொலைகளிலிருந்து திருவிழாக் காலங்களில் திரள் திரளாக வருகின்றார்கள். உலக மக்கள் சிறந்த புண்ணிய சீலர்களாகத் திகழ்வதற்கும், ஆண்டவனுடைய அருளைப் பெறுவதற்கும் சமய குரவர்களில் முதல்வரும், சைவசமய ஸ்தாபகருமான திருஞான சம்பந்தப் பெருமான் அருளியிருப்பது இரண்டே காரியங்கள். அவற்றில் ஒன்று ஆண்டவனது அடியார்களுக்கு அமுது செய்வித்தல் மற்றது எல்லாம் வல்ல எம்பெருமானது நல்ல திருவிழாக்களைக் கொண்டாடி பக்தி பரசவப்படுதல் என்பதை திருமயிலையில் எலும்பைப் பெண்ணுக்கப் பாடிய பதிகத்திலேயே அவர் அவ்வாறு அருளியிருக்கிறார் அதைப்பற்றி சேக்கிழார் செய்யுள் வருமாறு :-

**''மண்ணினிற் பிறந்தார்**
**பெறும்பயன் மதிசூடும்**
**அண்ணலார் அடியார்தமை**
**அமுதுசெய் வித்தல்**
**கண்ணினால்அவர் நல்விழாப்**
**பொலிவுகண்டு ஆர்தல்**
**உண்மையாமெனில் உலகர்முன்**
**வருகென உரைப்பார்''**

ஆகையினால் திருஞானசம்பந்தப் பெருமான் காட்டியருளிய தவநெறியைக் கடைப்பிடித்து, ஆண்டவனது அடியார்களுக்கு அமுது செய்வித்து, ஆண்டவனது திருவிழாக் காலங்களில் பக்திசிரத்தையோடு வழிபாடுகள் ஆற்றி நாமும் உய்ந்து, பிறரையும் உய்யும் நெறியில் நிற்குமாறு செய்யத் திருவருள் பாலிக்குமாறு அங்கயற்கண்ணி பங்கனும் ஆலவாய் அண்ணலைப் பிரார்த்திக்கின்றோம்.

**''ஞாலம் நின்புகழே மிகவேண்டும்,**
**தென்ஆல வாயில்உறையும் எம்ஆதியே''**



# ★ அகர முதல எழுத்தெல்லாம் ★

(திரு. கி. ஆ. பே. விசுவநாதம்)



''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

என்பது திருக்குறளில் முதற் குறள்.

தமிழ் எழுத்துக்கள்யாவும் ''அ'' என்ற எழுத்தை முதன்மையாகக் கொண்டிருப்பது போல இவ்வுலகம் இறைவனை முதன்மையாகக் கொண்டு இருக்கிறது என்பது இதன் பொருள்.

எழுத்துக்களை அறிபவர்கள் முதலில் அகரத்தை அறிவதுபோல இவ்வுலகத்தை அறிபவர்கள் முதலில் இறைவனை அறிய வேண்டும் என்பது இதன் கருத்து.

உயிர் எழுத்து 12. மெய்யெழுத்து 18. உயிர்மெய்யெழுத்து 216. ஆய்தஎழுத்து 1. ஆக எழுத்துக்கள் 247க்கும் 'அ' எழுத்து தலைமை தாங்குவதுபோல மண், நீர், காற்று, தீ, வெளி ஆகிய ஐம்பெரும் பொருள்களைக் கொண்ட இவ்வுலகுக்கு இறைவன் தலைமை தாங்குகிறான் என்பது இதன் மறைபொருள்.

'அகர முதல எழுத்தெல்லாம்' என்பது தமிழ் எழுத்துக்களை மட்டும் குறிப்பதல்ல. மலையாள எழுத்திலும் முதல் எழுத்து 'அ' கன்னடத்திலும் முதல் எழுத்து 'அ'. தெலுங்கிலும் முதல் எழுத்து 'அ'. லத்தின், கிரீக், ஆங்கிலம், பிரெஞ்சு முதலிய மேலைநாட்டு மொழிகளிலும் முதல் எழுத்து 'அ'. உருதுவிலும் முதல் எழுத்து 'அ'. சமஸ்கிருதத்திலும் முதல் எழுத்து 'அ'. இந்தியிலும் முதல் எழுத்து 'அ'. ஆகவே அகரமுதல எழுத்தெல்லாம் என்பதற்கு ''தமிழ் எழுத்தெல்லாம்'' என்று பொருள் கொள்ளாமல் எழுத்து என்று எழுதப் பெறுகிற எழுத்தெல்லாம் என்று பொருள் காண்பதே சிறப்பாகும்.

'பல மொழிகளைக்கொண்ட எழுத்துகள் எல்லாம் அகரத்தை முதலாக உடையன. அதுபோல பல்வேறு நாடுகளைக் கொண்ட இவ்வுலகம் இறைவனை முதலாக உடையது என்பது இதன் விளக்கமாகும்.

தோன்றிய, தோன்றுகிற, இனித் தோன்றவிருக்கிறஎழுத்துக்கள் எல்லாம் 'அ' எழுத்தையே முதலாக உடையன என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வள்ளுவர் பெருமான் ஆராய்ந்து கூறியிருப்பது வியப்பிற்குரியதாகும்.

எழுத்துகள் மட்டுமின்றி சொற்களும் கூடஅகரத்தையே முதலாக உடையனவாம். மக்கள் முதன் முதலில் வாயைத் திறந்த போதே 'அ' ஒலித்துவிட்டது. பின் திறந்த வாயை மெல்ல மூடித்திறந்தால் 'அம்மா' என்றும், அழுத்தமாக மூடித்திறந்தால் 'அப்பா' என்றும் ஒலிக்கிறது. மக்கள் இவ்வுலகில் முதன் முதலிற் கண்ட தாய் தந்தையர்க்கு முதன் முதலில் ஒலிக்கின்ற சொற்களையே பெயராகவைத்து இருப்பதும், அதிலும் மெல்லோசையை மென்மையை உடைய 'தாய்க்கும்' வல்லோசையை வன்மையை உடைய தந்தைக்கும் வைத்து அழைப்பதும், ஆடு, மாடுகளுங்கூட அலறும் பொழுது 'அம்மா' என்ற சொல்லே வெளி வருவதும் அச் சொல்லே எல்லாச் சொற்களுக்கும் முதன்மையாக அமைந்திருப்பதும் தமிழகத்

தில் மட்டும் அல்லாமல் உலகின் பலஇடங்களிலும் உள்ள பல மொழி பேசும் மக்களும் தங்களின் தாய் தந்தையரை 'அம்மா', 'அப்பா' என்றே அழைத்து வருவதையும் அதிலும் 'அ' எழுத்தே முதலில் அமைந்திருப்பதையும் காணும் பொழுது "அகர முதல சொல் லெல்லாம்" என்று சொல்லத்தோன்றுகிறது

வடிவிலும்கூட அகரம் முன் நிற்கிறது 'சர்வம்பிரணவ மயம் ஜகத்' என்பது வேதாந்திகளின் கருத்து. பிரணவம் என்பது 'ஓங்காரமே' என வடநூலார்கூறுவர். தமிழிலோ வடமொழியிலோ ஓங்காரம் முதல் எழுத்தாக இல்லை. உற்றுநோக்கினால் 'அ' என்ற முதல் எழுத்தே ஓங்கார வடிவாகத் தோன்றும்.

'அ' எழுத்தை முக்காற்பங்கு எழுதுங்கள். இன்னும் எழுதவேண்டிய காற்பங்கு போன்று மீதியாக இருக்கும். அதை அப்படியே செங்குத்தாக மேல்நோக்கிப் போட்டு விடுங்கள். அவ்வளவுதான். ஓங்கார வடிவை தலைகீழாகக் காண்பீர்கள். இதைக் காணும் பொழுது "அகரமுதல வடிவெல்லாம்' என்று நினைக்கவேண்டியிருக்கிறது.

வடிவு மட்டும் அல்ல; ஒலியும்கூட அவ் விதமே. பிரணவத்தின் ஒலி "ஓம்" என்பது இதை ஒலிப்பதானல் 'அ' என்று வாயைத் திறந்து, 'உ' என்று குவித்து 'ம்' மூடியாக வேண்டும். இதிலிருந்து 'ஓம்' என்பதை ஒலிக்க அ, உ, ம் எழுத்துகளும், அவற்றின் ஒலிகளும், தேவை என்பது தெளிவாகும் இதை அறிந்தே சிவவாக்கியர் 'அகார காரணத்துளே அடங்கிநின்ற வையகம் உகார காரணத்துளே ஒடுங்கிநின்ற வையகம் மகார காரணத்துளே மயங்கிநின்ற வையகம்' என்று கூறினர் போலும். 'ஓம்' என்பதை ஒலிக்கும் இந்த அ, உ, ம எழுத்துகள் மூன்றையும் 'அ' தன்னுள் அடக்கி நிற்பதை காணலாம். காணுங்கள்! 'அ' எழுத்தை சரிபாதியாக வெட்டுங்கள். மேற்பாதி 'வ' ஆகவும், கீழ்பாதி ஏ, அதாவது ம, தலைகீழாகவும் காணப்படும். மேற்பாதி 'வ' வை வலது கோடியில்வெட்டினல் 'உ' என்றும் "1" என்றும் காணப்படும். இம்மூன்றும் அ, உ, ம என்றாகி 'ஓம்' என்ற ஓசையை ஒலிப்பதைக் கண்டு மகிழுங்கள். இதைக்காணும் பொழுது "அகர முதல ஒலிஎல்லாம்" என்று கருதவேண்டியிருக்கிறது.

குறளில் உள்ள எல்லாம் என்ற ஒரு சொல் எழுத்தெல்லாம் என்பதில் எழுத்துடன் சேர்ந்தும், பிறகு தனித்தும் நின்று சொல்லெல்லாம், வடிவெல்லாம், ஒலியெல்லாம் என்பவைகளை தன்னுள் அடக்கி 'எல்லாம்' என்று நிற்பதை காணும்பொழுது நமது உள்ளமெல்லாம் மகிழ்கிறது.

ஆதி பகவனையும், அகரம் விட்டுவிட வில்லை. அவனைப் பருப் பொருளாகவும் நுண் பொருளாகவும் காட்டுகிற காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். அகரத்தின் '| 'உ, ம' என்ற மூன்று துண்டுகளும் கடவுள், உயிர், மாயை என்றாகின்றன. 'ம' மாயையின் முதல் எழுத்து. உ, உயிர் முதல் எழுத்து | தனிக்கோடு இறைவனது அரு உரு. இது அகரம் காட்டுகின்ற ஆதிபகவனின் பருப் பொருளாம். அடுத்து நுண்பொருள்!

எழுத்துகள் எல்லாவற்றிலும் 'அ' நுண்ணியதாகக் கலந்தே உள்ளது. க்+அ=க; ப்+அ=ப; ம்+அ+இ=மி; த்+அ+உ= து. 'அ' கலவாதஎழுத்தே இல்லை. ஒலியும் அப்படியே. எதை ஒலிக்க வாயைத் திறந்தாலும் 'அ' ஒலிக்கப்பட்டு விடுகிறது. எழுத்திலும், ஒலியிலும், 'அ' எவ்வளவு நுண் பொருளாக, மறைந்து இருக்கிறதோ அவ்வாவு நுண்பொருளாக ஆதிபகவனும் இவ்வுலகில்

மறைந்து காணப்படுகிறான் என்பது வள்ளுவரது முடிவு.

அ, உ, ம என்ற மூன்றையும் கடவுள், உயிர், மாயை எனக் கண்டோம். சித்தாந்திகள் இதனை பதி, பசு, பாசம் என்பர். இவற்றின் நிலைமையை ‘அகரம்’ அப்படியே காட்டுகிறது. உற்று நோக்கினால் குறளில் உள்ள உலகையே அகரத்துள் காணலாம். காணுங்கள். முதலில் மூன்று துண்டுகளையும் ஒன்று சேர்த்து அகரமாக்கி உற்று நோக்குங்கள்.

| தனிக்கோடாகிய இறைவன் உயிர் தன்னை வந்து அடையட்டும் என கருணை காட்டி, உயிர்முன் வந்துநிற்கிறான்.

“உ” என்ற உயிர் இறைவனை அடையத் துடியாய்த் துடித்து அவன் பக்கம் நீண்டு செல்லுகிறது.

‘ம’ என்ற மாயையானது உயிர்முழுதும் பற்றிக்கொண்டு இறைவனை அடைய விடாமல் தடுத்து தலைகீழாகத் தொங்கி இவ்வுலகுக்கு இழுக்கிறது.

உயிரானது மாயையையும் விடமுடியாமல், இறைவனையும் அடையமுடியாமல் இடையில் துன்புற்று வருந்திக் கொண்டிருக்கிறது. எப்படி அகரத்துள் அடங்கிநிற்கின்ற இவ்வுலக நிகழ்ச்சி?

உலகம் இறைவனை முதலாக உடையது என்று கூறியதிலிருந்தே உயிரை இரண்டாவதாகவும், மாயையை மூன்றாவதாகவும் உடையது என்பது தானாகவே தோன்றும். இம்மூன்றும் “முப்பொருளுண்மை” எனப்படும். இதனை அகரம்தன்னுட்கொண்டு ஒளிவீசுகிறது. இதை அறிந்தே வள்ளுவர் உலகுக்கு உவமையாக அகரத்தைக் கூறினார் போலும்! என்னே குறளின் பெருமை.

‘அ’ முன்னும் ‘உலகு’ பின்னும் உள்ள இக்குறளை இன்னும் ஒருமுறை படியுங்கள். அதன் புதைபொருள் அனைத்தும் நன்கு விளங்கும்.

அகர முதல எழுத்து,
எல்லா (வற்றிற்கு)ம் ஆதி,
பகவன் முதற்றே உலகு!





Dr. P. M. Rajaratnam

**Joint Secretary, Chitrai Exhibition (Municipal Health Officer)**

டாக்டர் பி. எம். இராஜரத்னம்

**பொருட்காட்சி கூட்டுக் காரியதரிசி & நகரசபை சுகாதார அதிகாரி**



Sri A. C. Jayaraj

**Joint Secretary, Chitrai Exhibition (Municipal Engineer)**

ஸ்ரீ A. C. ஜெயராஜ்

**பொருட்காட்சி கூட்டுக் காரியதரிசி & மதுரை நகரசபை பொரியியல் அதிகாரி**



பொரியியல் வல்லுனர், ஆணையாளர், நகரசபைத் தலைவர், சுகாதார அதிகாரி

# மதுரை மாநகரம் ★ ★ ★

## ★ ★ ★ அன்றும்-இன்றும்.

(பேராசிரியர் திரு. ஆ. கார்மேகக்கோன்)

---

தமிழ் நாடு பண்டைக்காலத்தில் இப்போதுள்ள குமரிமுனையிலிருந்து தெற்கே பெருங் கடலாக விளங்கும் நீர்ப்பகுதிகளெல்லாம் நிலப்பரப்பாக இருந்தபோது 1700 சதுர மைல் அளவு பரவியிருந்தது. அக் காலத்தில் அப்பகுதி குமரி நாடு முதலாக நாற்பத்தோன்பது சிறு நாடுகளாகப் பிரிவுண்டிருந்தது. இப்பண்டைத் தமிழ்நாட்டிலேயே பாண்டியர் தலைநகரங்களாகிய, தென் மதுரை, கபாடபுரம் ஆகிய நகரங்கள் இருந்தன. இவை இரண்டும், இரண்டுமுறை நடந்த கடல் கோளால் அழிந்துபோயின. இந் நகரங்களுள் தென் மதுரையில் முதற் சங்கமும், கபாடபுரத்தில் இடைச்சங்கமும் நிறுவப்பெற்றிருந்தன. கபாடபுரம் அழிந்தபோது அங்கு அரசு செய்திருந்த பாண்டியன், முடத்திருமாறன் என்பான். வாடச்சீர் தென்னவனுகிய இவன் தன் நாட்டின் ஒரு பகுதியை மலிதிரை யூர்ந்து வவ்விய பின்னர் தன் குடிகளைத் தன்னுடன் அழைத்துப் போந்து இம் மதுரை மாநகரை அமைத்து, பாண்டிய நாட்டின் தலைநகராக்கினுன். மதுரை நகர் உண்டான வரலாற்றைத் திருவிளையாடல் புராணம் வேறுவிதமாகக் கூறும். இம் மதுரையில் மூன்றும் தமிழ்ச் சங்கத்தை நிறுவிய பாண்டியனும் இவனேயாம். பரிபாடல், மதுரைக் காஞ்சி, சிலப்பதிகாரம் என்னும் பண்டை நூல்களும், பரஞ்சோதி, திருவிளையாடற் புராணம், வேம்பத்தூரார் திருவிளையாடல், சுந்தரபாண்டியம், கடம்பவன புராணம், வடமொழி ஆலாஸ்ஸிய மகாத்மியம் என்ற பிற்கால நூல்களும், மதுரை மாநகரத்தின் செல்வம், அமைப்பு, அழகு முதலியவற்றைப் புனைந்து பாராட்டிக் கூறியிருக்கின்றன. பரிபாடல்

> "உலகமோரு நிறையாத் தானோர் நிறையாப்
> புலவர்புலக் கோலால் தூக்க—உலகனைத்தும்
> தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்
> நான்மாடக் கூடல் நகர்"

என்று கூறுகின்றது.

உலகம் யாவையும் ஒரு தட்டிலும், மதுரைமா நகரை மட்டும் மற்றொரு தட்டிலும் வைத்துப் புலவர் தங்கள் அறிவென்னும் துலாக்கோலால் நிறுத்துப் பார்க்க, உலகம் யாவையும் வைத்த தட்டு நிறை குறைந்து வாடவும், மதுரையை வைத்த தட்டு நிறை மிகுந்து வாடாத தன்மையுடையதாக இருந்தது என்பது இப்பாட்டில் இங்ஙனம் குறிப்பிட்டிருப்பது, உலகத்தில் உள்ள நகரங்களின் சிறப்பெல்லாம் ஒன்றுசேரினும், இந்நகரின் சிறப்பிற்கு ஈடாகாது என்ற கருத்தை வெளிப்படுத்துகின்றது.

பண்டை நாளிலேயே இந்நகரம் இப்போதுள்ள அமைப்பையும், அழகையும் பெற்றிருந்தது என்று தெரிகின்றது. மதுரைமா நகரின் அழகிய தோற்றத்தை, பரிபாடல் என்னும் பழம்பாட்டு, ஒரு மலர்ந்த தாமரை மலரின் தோற்றத்தோடு

ஒப்பிட்டுக் கூறியிருப்பது ஒரு சிறந்த ஓவியக் காட்சியாக விளங்குகின்றது.

> ''மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
> பூவோடு புரையுஞ் சீரூர், பூவின்
> இதழகத்தனைய தெருவம், இதழகத்(து)
> அரும்பொருட் டனைத்தே யண்ணல் கோயில்
> தாதினனையர் தண்டமிழ்க் குடிகள்
> தாதுண், பறவையனையர் பரிசில் வாழ்நர்''

இப்பாடலில், இம் மதுரைமா நகரின் நடுவே, வானமளாவிய தங்க விமானங் களோடும், கலைக் கவின் மிக்க கோபுரங் களோடும் விளங்கா நின்ற இறைவன் திருக் கோயில், ஒரு தாமரை மலரின் பீடத்தை ஒத்துளது என்றும், அக் கோயிலைச் சுற்றி அணுக அணுக நாற்புறத்தும் அமைந்துள்ள நகர வீதிகள், தாமரை மலரை அடுக்கடுக் காகச் சூழ்ந்திருக்கும் இதழ்களைப் போன்று இருக்கின்றன வென்றும், அத் தெருக்களில் வாழும் தமிழ்க் குடிகள், அப் பூவிதழில் படிந்துள்ள மகரந்தம்போல் இருக்கின்றன வென்றும், பாண்டியனிடம் பரிசில் வேண்டி ஈண்டிவரும் புலவரும் பாணரும், அம் மலரில் உள்ள மகரந்தத்தை நாடிவரும் வண்டினம் போல்கின்றனர் என்றும், மிக அழகும், பொருத்தமும், பெற அமைந்திருக் கும் உவமை அறிஞர் ஆய்ந்து இன்புறத் தக்கதாக அமைந்துள்ளது.

இனி, சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ட மதுரையை ஆசிரியர் இளங்கோ வடிகள் சிறப்பித்துக் கூறியிருப்பதும் மதுரையின் பண்டைச் சிறப்பினை நாம் அறிந்து மகிழத் தக்கதாக உளது. கூடலம் பதி எனக் கூறப்படும் அந் நகரின் நடுவில் சிவபெருமான் கோயிலும், அதனைச் சூழத் திருமால் கோயில், துர்க்கை கோயில், முருகவேள் கோயில் முதலிய தேவர் கோட்டங்களும், அரசன் மாளிகையும், அறவோர் பள்ளிகளும் பொலிவுற்று விளங் கும்; பல்வேறு குடிகள் வாழும் வீதிகளும் இரத வீதி, விழா வீதி முதலியனவும் ஒன்றன் பின் ஒன்றாகச் சூழ்ந்து விளங்கி அழகு செய்யும். முச்சந்தியும், நாற்சந்தியும், பலி பெறு மன்றுகளும் அங்கங்கே காணப்படும். நாளங்காடி (பகற் காலத்துக் கடைவீதி), அல்லங்காடி (அந்திக் கடை) எனப்படும் கடை வீதிகளாலும், பல்வகை இரத்தினக் கடை, பொன் கடைகளின் செல்வத்தாலும் புடைவைக் கடைகளின் அடைவாலும், கூலக்கடைகளின் கோலத்தாலும் இந்திர னுடைய அருங்கலச் செப்பைத் திறந்து வைத்ததுபோல் விளங்கும்.

காலை முரசமும், மாலை முரசமும், வீர முரசமும், கொடை முரசமும், ஒலிக்கும் ஓசையும், அந்தணர் மறையோதும் ஓசை யும், காட்சி சாலையில் கூட்டில் அடைபட் டிருக்கும் புலி, கரடி, சிங்கம் முதலிய வற்றின் முழக்கமும், மக்களின் பேச்சின் ஒலியும் சேர்ந்து ஒரே ஆரவாரமாய்க் கேட்கும்.

வான் அளாவ நகரின் நாற்புறத்தும் பல்விதப் பொறிகளுடன் விளங்கும் மதிலும், கோபுரமும், மலையும், சிகரமும் போல் தோன்றும். இதனைச் சூழ்ந்த அகழி கடல்போல் ஆழ்ந்து அகன்றிருக்கும் மதிற் புறத்துள்ள புறஞ்சேரிஏரியும், பண்ணையும் கழனியும் சூழ்ந்து, தபோதனர் பள்ளி களுடன் விளங்கும். இம் மதிலுக்கு ஒரு புறத்து அகழாய் விளங்குவது வையை மா நதி.

வையை :-

இந் நதியின் வளத்தால் அதன் கரை யின் புறமெல்லாம் குரவமும், மகிழும், கோங்கும், கடம்பும் பூத்துப் பூந்துகில் போர்த்தது போலக் காணப்படும். ஆற்றில்

பூக்கள் உதிர்ந்து நீரோட்டத்தை மறைத்து பூ வண்ணமாகவே காணப்படும். இதனல் ஒரு புலவர் புனல்யாறு அன்று இது பூம் புனல்யாறு என்று புகழ்ந்துள்ளார். இவ் வாற்றில் இடையருது வெள்ளப் பெருக் கெடுத்து ஓடிக்கொண்டிருக்கும். இப்போது போல் அக்காலத்தில் வையை மணல் வெள்ளமாக வறண்டிருந்ததில்லை. இத னுலேயே ஒரு புலவர் இதனை வையை என்னும் பொய்யாக் குலக்கொடி எனப் போற்றுவராயினர். கோடை நீடினும் இதன் நீர்ப்பெருக்குக் குன்றுது சுரந்தோடும். இத னுலேயே மதுரை ஆடித் திங்களில் வந்த கோவலனும் கண்ணகியும் மரப்புணையில் ஏறி ஆற்றைக் கடந்தனர்" எனச் சிலப்பதி காரம் கூறுகின்றது. வெள்ளப் பெருக்கு இடையருமையால் வையைக்கு வடக்கி லுள்ளார் மதுரைக்கு வருதற்கு எப்போதும் ஆற்றின் வடகரையில் பரிமுக அம்பியும் (குதிரைமுக ஓடம்), கரிமுக அம்பியும் (கரி-யானை), அரிமுக அம்பியும் (அரி-சிங்கம்) எப்போதும் மிதந்துகொண்டிருக்கும். இவ் வையையின் வெள்ளச் சிறப்பினையும், இதில் நிகழும் புதுப்புனல் விழாவையும், இயற்கை அழகையும் பரிபாடல் என்னும் நூல் 21 பாடல்களால் சிறப்பித்துக் கூறு கின்றன. வையை என்னும் இவ்வாற்றின் பெயரை புராணங்கள் வைகை என்றும் கூறுகின்றன. சிவபெருமான் குண்டோதர னுடைய நீர் வேட்கையைத் தணிக்க கங்கை நதியையே இம்மதுரைக்கு வரு மாறு செய்தார்; அதுவே வைகை எனப் புராணங்கள் புனைந்து கூறும்.

**மருதனர் கண்ட மதுரை ;—**

2000 ஆண்டுகளுக்கு முன்பு மதுரை யில் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய அரச னது ஆட்சியில் மதுரையிலேயே வாழ்ந்து வந்த மாங்குடி மருதனர் என்னும் புலவர் மதுரைக் காஞ்சி என்னும் பாட்டு ஒன்றை இயற்றியுள்ளார்; அப்பாட்டில் மதுரை யைப் பற்றிப் பின்வருமாறு அவர் வர்ணிக் கிருர் திருமாலுக்காகக் கொண்டாடப் படும் திருவோணத் திருவிழாவின் போது மதுரை நகரில் தெருக்களும் வீடுகளும் மிக அழகாக அலங்கரிக்கப் பெற்றிருக்கும். கோயில்களில் விழாக்கள் கொண்டாடப் படுவதைப் பார்ப்பதற்கு செல்வர்கள் தேரேறிச் செல்வார்கள். அவர்கள் அணிந் திருக்கும் ஆடை பட்டினல் நெய்யப்பட்டு மிக நுட்பமான பூ வேலைப்பாடு உடைய தாக இருக்கும். வீரர்களும் வீரக் கழலுடன் விலையுயர்ந்த ஆடையணிகளை அணிந்து கொண்டு அரையில் உடைவாளுடன் கோயிலுக்குச் செல்வார்கள். கோயில்களில் பலவகை இன்னிசைக் கருவிகள் முழங்கத் திருவிழாக்களும் வழிபாடுகளும் நடை பெறும்.

பௌத்தப் பள்ளிகளில் புத்த தேவனை வணங்குவதற்குப் பெண்கள் அழகிய அணிகளைப் பூண்டு தம் கணவன்மார் களுடன் குழந்தைகளைக் கையில் தாமரை மலர்களை ஏந்திச் செல்வதைப் போல ஏந்திச் செல்வார்கள். சமணர்களது பள்ளி கள் குளிர்ந்த குளங்களைப் போல இருக்கும். அவற்றின் சுவர்கள் செம்பால் செய்யப் பட்டது போல மிக அழகாகப் பல சித்திரக் காட்சிகளுடன் திகழும். அப்பள்ளிகளைச் சுற்றிப் பூஞ்சோலைகளும் உண்டு. அவற் றில் சமணப் பெரியோர்கள் தங்கிப் பூசை களை நடத்துவார்கள்.

அந்தணர், வணிகர் முதலானேருக்கு நகருக்குள் தனித் தனித் தெருக்கள் இருந் தன. அந்தணர் தம் வீடுகளில் மறைகளை இனிமையாக ஓதிக்கொண்டிருப்பார்கள்.

அவ்வீடுகள் மலைகளைப் போல உயர்ந்து விளங்கின. வணிகர் வீடுகள் குன்றுகள் திரண்டிருப்பதைப்போன்று இருக்கும். வணிகர் பல நாட்டுப் பொருள்களைக் கொணர்ந்து வியாபாரம் செய்தனர் சில்லரை வணிகர், தெருக்களிலும் சந்துகளிலும் அலைந்து திரிந்து தம் பொருள்களை உரக்கக் கூவி விற்றனர். சங்கு வளையல் செய்வோர், பொற்கொல்லர், பாத்திர வாணிகர், ஆடை விற்போர், வாசனைப் பொருள்களை விற்போர், சித்திர வேலைக் காரர், நவதானிய வாணிகர் முதலிய பல வகைத் தொழிலாளர்களும், தரகர்களும், வீதியில் திரிவார்கள். வரிசையாக உள்ள மாடங்களின் நிழலில் பழம், பணிகாரம், சிறு பொருள்கள் கடைகளிருக்கும்,

வீடுகளில் மாலை நேரத்தில் பெண்கள் மாலைகளைச் சூடி ஆபரணங்களை யணிந்து கொண்டு, கஸ்தூரி, சந்தனம் முதலிய வாசனைப் பொருள்களைப் பூசிக்கொண்டு, ஆடைகளுக்கு அகிற்புகையூட்டி அழகாக விளங்கி, விளக்குகளை ஏற்றி வீட்டிற்கு உள்ளும் வெளியிலும் வைத்து, யாழிசைத்து நெல்லும் மலரும் தூவித் தமது இல்லுறை தெய்வங்களை வணங்குவார்கள்.

தெருவில் முருகனுக்கு விழாக் கொண்டாடுவதற்காக வெறியாடல் நடைபெறும். அப்போது பலவித இசைக் கருவிகள் முழங்க பூசாரி ஒருவன் வேலைக் கையில் ஏந்தித் தலையில் பூச்சூடி, தன்மேல் தெய்வம் ஏறி ஆடத் தொடங்குவான். பெண்கள் கைகோத்துக் குரவைக் கூத்து என்னும் கூத்தை ஆடுவார்கள். மற்றும் பலவகைக் கூத்துக்களும், ஆடல் பாடல்களும் அப்பொழுது நிகழும்.

நள்ளிரவு வரையில் இவ்வாறு பல வகை ஆடல்பாடல்களும், ஆரவாரங்களும் நடைபெறும். பிறகு எல்லாம் ஓய்ந்து, அமைதியாக இருக்கும். மீண்டும் விடியற் காலையில் காலைமுரசம் ஒலி கேட்டு மக்கள் துயிலுணர்ந்து எழுவார்கள். துயிலெழுந்த பின், சிலர் யாழிசைப்பர்; பெண்கள் முற்றங்களை மெழுகிக் கோலமிட்டு அழகு செய்வர். வேலைகளைச் செய்யும்போது காலை நேரத்தில் பெண்களின் காற்சிலம்பின் ஓசை "கலீர்" "கலீர்" என்று ஒலிப்பது மிக இனிமையாக இருக்கும்.

இத்தகைய சிறப்புடைய மதுரை ஏறக்குறைய கி. பி. 14-ம் நூற்றுண்டு வரை பண்டையப் பெருமையில் குன்ருது நின்று நிலவி வந்தது என்று பல சான்றுகளால் அறியப்படுகின்றது. பண்டைக் காலத்தில் இவ்வளவு சிறப்புடன் விளங்கிய மதுரை இடைக்காலத்தில் மகமதிய படையெடுப்பால் அழிக்கப்பட்டுவிட்டது. மாலிக்காபூர் என்னும் மோகலாய தளபதி மதுரை நகரையும், கோயில் முதலியவற்றையும் தகர்த்து அழித்துவிட்டான். பிறகு விஜய நகர அரசர்களின் பிரதிநிதிகளாக மதுரையை ஆண்ட நாயக்க மன்னர்களது ஆட்சிக் காலத்தில் மதுரை புதுப்பிக்கப்பட்டது. இப்பொழுது மதுரை அடைந்திருக்கும் சிறப்பிற்கு அம்மன்னர்களே பெரிதும் காரணமாவார்கள். குறிப்பாக திருமலை நாயக்கர் ஆட்சிக்காலத்தில் கட்டப்பெற்ற மீனுட்சியம்மன் கோயிலும், மஹாலின் ஒரு பகுதியும், வண்டியூர்த் தெப்பக்குளமும் மண்டபமும் கட்டப்பட்டபடியே இன்றும் அவை விளங்குகின்றன. மீனுட்சியம்மன் கோயிலின் கோபுரங்கள் வானளாவி நின்று, ஊருக்கு அப்பால் பல மைல் தூரம் வரையில் மிகக் கம்பீரமாகக் காட்சியளித்துக் கண்ணையும் மனத்தையும் கவரத்தக்கதாய் விளங்குகின்றன.

கோயிலில் உள்ள கிளி மண்டபம், பொற்றுமரைக் குளம், திருக்கல்யாண மண்டபம், கொடி மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், கோயிலுக்கு வெளியே உள்ள புதுமண்டபம் என்னும் வசந்த மண்டபம் முதலிய பல அழகிய சிற்ப வேலைப்பாடுடையவையாய் உலகிலேயே இணையற்று விளங்குகின்றன. இவற்றைக் கண்டு வியந்து பாராட்டாத அந்நிய நாட்டு யாத்திரிகர்களும், கலையுள்ளம் படைத்தவர்களும் இல்லை. ஆயிரக்கால் மண்டபத்தில் முன் வரிசைத் தூண்களில் உள்ள சிற்பங்கள், அயல் நாட்டினர் அனைவரும் கண்டு மூக்கின் மீது விரல் வைத்து வியப்புடன் பாாக்கத்தக்கவையாய் உள்ளன. அவற்றுள் தளவாய் ஆரியநாத முதலியார் (விஸ்வநாத நாயக்க மன்னரது தளபதியும், அமைச்சருமாக இருந்தவர்) குதிரை மீது ஏறி நிற்கும் வீரத்தோற்றமும், குதிரை கழுத்தினை வளைத்து முன் கால்களைத் தூக்கி கதியிட நிற்கும் பரிவேகத் தோற்றமும், குறவன் குறத்தி சிற்பமும், இசைத் தூண்களும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. மேனுட்டவர் இச் சிற்பங்களைப் போல மரத்திலும், மண்ணிலும் படிவம் செய்து எடுத்துக்கொண்டு போயிருக்கிறுர்கள் என்றுல், இவற்றின் அரிய சிற்ப வேலைப்பாட்டின் திறத்தினை என்னவென்று புகழ்வது!

திருமலை நாயக்கர் மஹால் என்னும் அரண்மனை, இரும்பும் மரமும் சேர்க்கப்படாமல் வெறும் சுதையினுலும் செங்கல்லினுலுமே கட்டப்பட்டது. 300 வருஷங்களுக்கு மேலாகியும் அது சிறிதும் பழுதுபடவில்லை என்றுல், அதன் உறுதியான அமைப்பை எங்ஙனம் கூற முடியும்? அதன் தூண்கள் ஆறடி குறுக்களவுள்ளவையாய், 50 அடி உயரத்திற்குமேல் பிரம்மாண்டமாகக் காட்சியளிக்கின்றன. அதன் உட்புற மண்டபங்கள் மிகப்பெரிய வளைவுகளுடன் பொருந்தி அழகிய வேலைப்பாடுடையவையாய் விளங்குகின்றன. இப்பொழுது உள்ள மஹால் கட்டிடம் கொலு மண்டபமும் நர்த்தன மண்டபமும் ஆகிய இரு பகுதிகளே.

வண்டியூர்த் தெப்பக்குளம் என்பது கோயிலிலிருந்து 3 மைல் தொலைவில் உள்ளது. இது சுமார் 2 பர்லாங் நீளமும் அகலமும் இரண்டு பர்லாங் அளவுள்ளதாய் நடுவில் உய்யானச் சோலையோடு கூடிய அழகிய நீராழி மண்டபத்தைக்கொண்டு விளங்குகின்றது. இது மதுரை நகருக்கு ஒரு முகம்போல் விளங்கிக் காட்சியளிக்கிறது. இக் குளத்தில் தைப் பூசத்தன்று தெப்பத் திருவிழா நடைபெறும். இந் நகரில் மாதந்தோறும் மக்கள் மனதிற்கு இன்பூட்டும் வகையில் பல திருவிழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்பெறுகின்றன. அவற்றுள் சித்திரைத் திருவிழாவே பெரியதாகும். அதற்கு எண்ணற்ற மக்கள் வந்து குழுமுவார்கள். 'மூர்த்தி, தீர்த்தம், தலம் என்னும் முச் சிறப்புகளையும் உடையது மதுரை. என்று புராணங்கள் இதனைப்புகழ்கின்றன.

இக் காலத்தில் மதுரை நகரம் எல்லா வகையாலும் சென்னை நகருக்கு அடுத்ததாகப் பெருமைபெற்று விளங்குகிறது. இதன் மக்கள் தொகை சுமார் 4 லெட்சம், இங்கு இதன் பண்டைக் கல்விப் பெருமைக்கு ஏற்ப அமெரிக்கன் கல்லூரி மதுரைக் கல்லூரி, தியாகராசர் கல்லூரி, டோக் பெருமாட்டி கல்லூரி, பாத்திமா கல்லூரி ஆண் பெண்களுக்கென்று ஐந்து பெரிய கலைக் கல்லூரிகளும், ஒரு மருத்

துவக் கல்லூரியும், அரசினர் பொறியியற் பள்ளியும், பாண்டித்துரைத் தேவரால் நிறுவப்பெற்ற நான்காம் தமிழ்ச் சங்கமும், ஒரு வடமொழிப் பாடசாலையும், பதினாறுக்கு மேற்பட்ட உயர்நிலைப் பள்ளிகளும் இருக்கின்றன. இவை இந்நகரின் கல்வி, கலை வளர்ச்சிக்கு எடுத்துக்காட்டாக இலங்குகின்றன. தொழில்துறையில் இந்தியாவிலேயே மிகப் பெரிய நூல்நூற்கும் தொழிற்சாலையாகிய ஹார்வி மில் இங்குள்ளது மற்றும் மீனாட்சி மில், பாண்டியன் மில் முதலிய பெரிய பஞ்சாலைகளும் உள்ளன. கைத்தறி, நெசவுத் தொழில், சாயத்தொழில், வாணிகத்துறை முதலியவற்றிலும் இந்நகர் பெயர்பெற்றது. இப்பொழுது இந்நகரம் இதன் பண்டை அமைப்பு மாறாமல் வைகையாற்றின் வடக்கிலும், மற்றத் திசைகளிலும் மிகவும் விரிவடைந்து வருகிறது. இதனைப் பல்லாற்றானும் சிறந்த திறமையுடன் நகராட்சி மன்றம் நன்கு பரிபாலித்து வருகிறது. இங்குள்ள கைத்தொழில், வணிக நிலையங்களெல்லாம், இந்நகர், முற்காலத்தில் ரோமாபுரி முதலிய நகரங்களோடு செய்த வணிக வளர்ச்சியை நினைவூட்டத் தக்கவைகளாக விளங்குகின்றன.

பண்டைத் தமிழ் வேந்தரான சேர, சோழ, பாண்டியரது தலை நகரங்களுள், சேரனது தலைநகரமான வஞ்சி இருந்த இடம் தெரியாமல் மறைந்து போகவும், சோழன் தலைநகரமாகிய உறையூர் பொலிவிழந்து நலிந்து விளங்கவும், மற்றொரு சோழன் பெரும்பட்டினமாகிய காவிரிப்பூம்பட்டினம் கடல்கொண்டுவிட இப்போது ஓர் சிற்றூர் அப்பெயரை யுடையதாகவும் இருக்க, பாண்டியன்கோ நகராகிய இம் மதுரைமா நகரமோ பண்டைச் சிறப்பில் ஒரு சிறிதும் இதுவரை குன்றாது நூற்றாண்டு தோறும் வளர்ந்தோங்கி திகழ்ந்து கொண்டிருப்பது பாண்டிய நாட்டார் செய்த பெரும் தவப்பயனே யாகும்.





Madurai Municipal Chairman and Councillors — மதுரை நகரசபைத் தலைவரும், அங்கத்தினர்களும்

# பரிபாடலில் வையை

(டாக்டர் மா. இராசமாணிக்கனுர்)

பரிபாடல் என்னும் சங்கநூலில் எட்டுப் பாடல்கள் வையை ஆற்றைப் பற்றியவை. அவற்றில் புதுவெள்ளம் வரும் காட்சி, மக்கள் அதில் விளையாடும் காட்சி முதலியன கீழ்வருமாறு விளக்கப்பட்டுள்ளன:

மேகங்கள் கடல்நீரை முகந்து வானத்தை நோக்கி எழுகின்றன. நீரை முகந்த அவை கருநிறமடைந்து, ஒன்றன்பின் ஒன்முகச் செல்லும் காட்சி பகைப்புலத்தை நோக்கிச் செல்லும் பாண்டியனது யானைக் கூட்டத்தை ஒத்திருக்கிறது. அங்ஙனம் படையெடுத்துச் செல்லும் பாண்டியனது முரசம் அதிர்வது போலக் கார் மேகங்கள் இடி ஓசையை உண்டாக்குகின்றன. அவனது வாள் மின்னுவது போல வானத்தில் மின்னல்கள் தோன்றுகின்றன. அவனது வில் வீரர் விடும் கணக்கற்ற அம்புகள் போல மழைத்துளிகள் பொழிகின்றன.

இங்ஙனம் பொழியும் மழைநீர் மலைத் தொடரின் மீது விழுந்து பல அருவிகளாகத் தோற்றமெடுக்கிறது. இவ்வாறு தோன்றும் பல அருவிகள் ஒன்று சேர்ந்து போமுகப் பெருக்கெடுத்து வருகின்றன. இப்போறே வையை என்பது. பகைவர் நாட்டின்மீது படையெடுத்து வரும் பாண்டியன் படை தலைநிமிர்ந்து வருதல் போல, வையை யாற்று வெள்ளம் மேடு பள்ளங்களைத் தாண்டிக் கொண்டு இரவும் பகலும் பிரயாணம் செய்து வருகின்றது. அதன் இரு கரைகளிலும் வானுற ஓங்கி வளம்பெற வளர்ந்திருக்கிற மிகப் பெரிய மரங்களாகிய நாகம், அகில், வாழை, நவமை, சந்தனம், தகரம், நாழல், தேவதாரம் முதலியன வெள்ளப் பெருக்கினல் ஆட்டங்கொள்கின்றன. இவ்வாறு வையை பெருக்கெடுத்து வருதல், ஒரு கடல் கிளர்ந்து வருவதுபோலக் காட்சி யளிக்கின்றது. அம்மரங்களிலுள்ள பூக்கள் ஆற்றின் வெள்ளத்தின்மேல் பரந்துசெல்லும் காட்சி, வையை என்னும் மங்கை பூவாடைபோர்த்துக் கொண்டாற்போலக் காணப்படுகின்றது.

வையை ஆறு ஆடலறியாத நடனமகள் நடந்து செல்வதைப்போல மெதுவாகச் செல்லுகிறது. கணவன்மீது சிறுகோபம் கொண்ட அறிவற்ற மனைவி அவனைக் கடந்து நீங்குவது போலச் சில இடங்களில் எதிர்ப்பட்ட அணைகளை முறித்துச் செல்லுகிறது. மணம் மிகுந்த மலர்கள் மேலும்மேலும் ஆற்று நீரில் விழுந்துகொண்டே இருப்பதால், வெள்ளநீர் பலவகை மணங்களும் பொருந்தியதாக இருக்கின்றது. வெள்ளம் வருவது அறியாது ஆற்றோரத்தில் அமைந்த ஊர்களில் வாழும் சிறுவர் சிறுமியர் மணல்வீடுகட்டி விளையாடினர். இப்பொழுதுவரும்ஆற்றுவெள்ளம் அம்மணல் வீடுகளை அழித்து விடுகிறது. தங்கள் முயற்சியினல் உண்டான மணல் வீடுகள் அழிதலைக்கண்ட அச்சிறுவர் சிறுமியர் மனம் புழுங்குகின்றனர். சிறிய பெண்கள் மணல் பாவை செய்து விளையாடினர். அப்பாவைகள் வெள்ளத்தில் மறைந்தன. அதனல் அச்சிறுமியர் கண்ணீர்விட்டு அழுகின்றனர். இளம் பயிர் உள்ள வயல்களில் வெள்ளம் பாய்வதைக்கண்ட உழவர்கள், தங்கள் முயற்சி வீணானதைக் கண்டு கண்ணீர் வடிக்கின்றனர் ஊரைக் கடல் சுற்றியது போலக் கிராமங்களை வெள்ளம் சுற்றிக்கொண்டது. அதைக் கண்டு அவ்வூரார் செய்வகை அறியாது தவிக்கின்றனர். ஆற்று வெள்ளம் தென்னை, பாக்கு முதலிய மரங்களின் கழுத்தை முட்டும்

அளவுக்கு உயர்ந்து செல்லுகிறது. அதனால் வெள்ளத்தில் செல்லும் வாளைமீன்கள் தென்னம் பாளையையும், கமுகின் பாளையையும் உண்கின்றன. வெள்ளப் பெருக்கினால் நாற்றங்கால்கள் வண்டலிட்டு மேடாயின. வெள்ளம் சோலைகளிற் சென்று பரவுதலால் அச்சோலையிலுள்ள மரங்கள் பூக்கத் தொடங்குகின்றன. வண்டுகள் பூக்களில் உள்ள தேனை உண்ண அச்சோலைகளில் ரீங்காரம் செய்து சுற்றிக் கொண்டிக்கின்றன.

ஆற்றில் வெள்ளம் வருதலைக் கேட்டுக் கரையோர ஊர்களிலுள்ள மக்கள் எல்லையற்ற மகிழ்ச்சி அடைகின்றனர். இஃது இயற்கை தானே! உலகத்திற்குத் தண்ணீர் இன்றியமையாதது அன்றோ? புது வெள்ளத்தில் நீராட விரும்பிய மகளிர் தாம் நீராடுதற்குரிய புடவையை அலங்கரித்து உடுக்கின்றனர். நீராடிய பிறகு தமது கூந்தலின் ஈரத்தைப் போக்கப் புகைக்கப்படும் அகில் முதலியவற்றையும் அவை புகைத்தற்கு நெருப்பையும் கூந்தலிற் சூடுதற்கு பூக்களையும் வையை வழிபாட்டிற்குரிய பொருள்களையும் எடுத்துக் கொண்டு வெள்ளத்தை நோக்கிச் செல்கின்றனர். சில இடங்களில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகின்றது. 'கரையை அடைக்க ஆட்களை வரும்படி பறை அறையுங்கள்', என்று கரை காப்பவர் ஓசையிடுகின்றனர். உடனே பறை ஓசை ஊர்தோறும் கேட்கின்றது. அந்த ஓசை கேட்டு கட்டுடல் படைத்துள்ள காளைகள் கரை உடைந்த இடங்களை நோக்கி ஓடுகின்றனர்.

வையை ஆற்றுப் புதுவெள்ளம் மதுரைக் கோட்டை மதிலைத் தாக்கியபடி பாய்ந்து செல்கின்றது. அந்நகரத்து ஒரு பால் வையையாற்றில் நீராட ஆண் யானைகளும் பெண் யானைகளும் அழைத்துச் செல்லப்படுகின்றன. பொருள் வசதியுள்ள மக்கள் ஆற்றில் நீராட அலங்கரிக்கப்பட்ட யானைகளின் மீதும் குதிரைகளின் மீதும் பெயர் சொல்லி அழைக்கப்படும் எருது பூண்ட வையத்திலும் கோவேறு கழுதை மீதும் பல்லக்கிலும் செல்கின்றனர். பொது மக்கள் அணி அணியாக நடந்து செல்கின்றனர். அவருள் இளைஞர்கள் வேலேந்திய முருகனைப் போலக் கம்பீரமாக நடந்து செல்கின்றனர். ஒவ்வொரு வாத்தியமும் ஒருவகைக் கூறுபாடு உடையதாயிருப்பினும், ஓரிடத்தில் ஒரே சமயத்தில் அவை பலவும் ஒலிக்கும்பொழுது தாள கதியால் அவை அனைத்தும் மென்னடையனவாய்ச் செல்லும். அவைபோல் ஆற்றை நோக்கிச்செல்லும் வாலியரும் மெலியரும் இடையினரும் நெருக்கத்தால் மென்னடையினராய்ச் செல்லுகின்றனர்.

பெண்கள் சிலர் அகன்ற தெரு வழியே ஒரு பெண்யானை மீது செல்கின்றனர். அவர்களுக்குப்பின் ஒரு களிற்றின் மீது மைந்தர் சிலர் ஏறிச்செல்கின்றனர். முதலிற் செல்லும் பெண் யானை, ஒரு மாளிகையின் முன்புறம் சுதையாற் செய்யப்பட்டிருந்த ஒரு புலியின் உருவத்தைக் கண்டு, அஃது உயிரோடுள்ள புலி என்று எண்ணி அஞ்சி ஓடுகிறது. அதன் மீதிருக்கின்ற பெண்கள் அலறிக் கூவுகின்றனர். அப்பிடி பாகனுக்கும் அடங்காது இங்கும் அங்கும் அலைகிறது. களிற்றின் மீது சென்ற இளைஞர் தம் களிற்றைச் செலுத்திப் பெண் யானையை மடக்குகின்றனர். அதன் மீதுள்ள மகளிரின் நடுக்கத்தைப் போக்குகின்றனர். இம் மைந்தர் செயல் பாயும் கயிறும் மரக்கூட்டமும் சிதைய அழியும் நிலையிலுள்ள மரக்கலத்தைப் பயினால் திருத்தி அதில் இருப்பவரது நடுக்கத்தைப் போக்கும் கப்பலோட்டியின் செயலை ஒத்திருக்கிறது. சிலர் வெள்ளத்தில் மிதந்து விளையாட விரும்பி பலவகை மிதவைகளைச் செய்து எடுத்துச் செல்கின்றனர்.

வையைச் சென்று பார்ப்பவர் கூட்டம் அதன் கரையை ஒத்திருக்கிறது. அங்கு கூடிய மக்கள் பலவாறு பேசுகின்றனர். 'வையை என்னும் இந்நங்கை ஆண்டுதோறும் தவறாமல் வந்து நம்மைக் காக்கின்றாள். அதனால் இவளை

'வையை என்னும் பொய்யாக் குலக்கொடி' என்று புலவர் பாராட்டுகின்றனர்' என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலர், 'நமது பாண்டியனது குளிர்ந்த அருளைப் போல இந்நீர் குளிர்ந்து காணப்படுகிறது. நீர், இல்லையாயின் உயிர்கள் வாழ்தல் எங்கே? என்று பேசிக்கொள்கின்றனர். வேறிடத்தில் சிலர், 'புது வெள்ளத்தில் பெண் யானைகளின் மேல் ஏறிச்செல்லும் அக் காதலரைப் பாருங்கள்', என்று சுட்டிக்காட்டிப் பேசுகின்றனர். மற்ருெருபால், 'வெள்ளம் ஓரளவாக இருத்தல் வேண்டும், அளவுக்கு மேற்பட்டால் வயல்கள் பாழாகும்; ஊர்கள் அழியும்; குடிசைகளில் வாழும் எளிய மக்கள் தவிக்க நேரிடும் என்று கவலையோடு பேசுகின்றனர். வேருேரிடத்தில் சிலர், 'பெண்கள் வையைக்கு வணக்கம் செய்வதைப் பாருங்கள். புது வெள்ளம் வந்த மகிழ்ச்சியால் அவர்தம் முகங்கள் இன்று மலர்ந்த தாமரை மலர்களை ஒத்திருக்கின்றன', என்று மகிழ்ச்சிதோன்றக் கூறுகின்றனர்.

துறைகள் தோறும் மகளிர் நீராடுகின்றனர். அவர்தம் உடம்பில் பூசியுள்ள குங்குமக் குழம்பும் சந்தனச் சாந்தும் கூந்தலில் பூசிய எண்ணெயும் சூடிய மலர்களும் நீரில் கலக்கின்றன. அதனல் வையைப் புதுநீர் நன்மணம் பெறுகின்றது. வையை மீது பலவகை மலர்கள் யாத்திரை செய்கின்றன. அம்மலர்கள் நீராடும் மக்களுடைய காதுகளில் ஒன்றும் பலவுமாய்த் தங்குகின்றன.

நீராடும் மகளிர் கைகளில் வளையல்களையும், கழுத்தில் முத்துமாலைகளையும், இடையில் ஆடைக்குள் இருவடமாய் அமைந்த 'மேகலை' என்னும் அணியையும், ஆடையின் புறத்தே எட்டு வடமாய் அமைந்த 'காஞ்சி' என்னும் அணியையும் அணிந்திருக்கின்றனர். அவர்கள் நீரில் குடைந்து ஆடுதலால் வெள்ளத்தின் வேகத்தில் இவை தத்தம் இடங்களைவிட்டு அலைகின்றன. பகைவர் நிலத்திற் புகுந்து அவர்தம் பொருள்களைப் பாண்டியன் கொள்ளை கொள்ளுதல் போல, வையை ஆற்றுப் புதுப்புனல், சிலர் அணிந்திருந்த பலவகை வடங்களை இழுத்துச் செல்கின்றது.

மகளிர் சூடிக்கழித்த மெல்லிய மலர்களும் மைந்தர் அணிந்த மாலைகளும், கரைக்கண் இருக்கும் மரங்களின் வேர்களும் சுள்ளிகளும், புல்பூண்டுகளும், காய்களும் பிறவும் ஆற்றில் மிதந்து செல்கின்றன. கள்ளுண்டு களித்த கீழ் மக்கள் பல் துலக்குகின்றனர். முன்பே சந்தனக் குழம்பு முதலிய வற்ருல் வேறுபட்ட ஆற்று நீர், மேற்சொன்ன பலவகைப் பொருள்களையும் தாங்கிப் பாய்தலால் வேதத்தில், வல்ல பெரியோர் அந்நீரில் நீராடாது செல்கின்றனர். வேறு சிலரும் அந்நீரைத் துறக்கின்றனர்.

சிலர் கெட்டியாற் செய்த மிதவைகளைப் புது வெள்ளத்தில் செல்லவிட்டு அதன் மீது விளையாடுகின்றனர். வேறு சிலர் வாழைமரங்களைக் கொண்டு நீர்மேல் தாவிச் செல்கின்றனர். சிலர் ஓரிடத்தில் ஏறி, நீரின் போக்கிலே செல்கின்றனர். சிலர் அக்கரைக்கு நீந்திச் சென்று மீண்டும் இக்கரைக்கு நீந்தி வருகின்றனர். வீரர்கள் தம்முள் விளையாட்டு வாட்போரும், ஈட்டிப்போரும் வெள்ளத்தில் நின்றபடியே செய்து நீரைத் தெளிவற்றதாக்குகின்றனர். பலவகைத் தொழில்களில் ஈடுபடும் சாதாரண ஆடவரும் பெண்டிரும் நீரிற் குதித்து விளையாடுகின்றனர். காதலனும் காதலியும் ஒருவர் மீது ஒருவர் தண்ணீரைத் தெளித்து விளையாடுகின்றனர். இவ் விளையாட்டினல் அவர்தம் கண்கள் சிவக்கின்றன. சிறிய மனத்தாங்கலால் ஒருவரோடொருவர்

பேசாதிருந்த கணவனும் மனைவியும் புனல் விளையாட்டில் இறங்கினவுடன் தம் மனக் கசப்பை மறந்து மகிழ்ச்சியோடு பேசுகின்றனர். அங்ஙனம் பேசி மகிழ்ந்த பெண்கள் வையையை நோக்கி, 'வையாய் நின்னூர் இந் மூதூரில் வாழ்வார்க்கு இன்பமும் பொலிவும் மிகுக்க அணியில் உண்டாயின. ஆதலால் அகன்ற இடத்தை உடையதாயினும் இவ்வுலகம் நினது புகழை அடக்க மாட்டாது. நீ வாழ்வாயாக!' என்று வாழ்த்துகின்றனர். ஆடல் பாடல்களில் வல்ல மாதவியை ஒத்த செல்வ மகளிர் சிலர் தத்தம் காதலருடன் பெண் யானைகள் மீது இருந்தபடி புது வெள்ளத்தைக் கடக்கின்றனர். பலர் இக்கரையில் விளையாடுகின்றனர். சிலர் அக்கரையில் புனல் ஆடுகின்றனர். நீராடிக் கரையேறிய பிறகு அவருட் சிலர் - ஆடவரும் பெண்டிரும் - கள்ளுண்டு களிக்கின்றனர்; நாட்டையும் தம்மையும் வாழ்விக்க வந்த வையையை வாழ்த்திக் கூறுகின்றனர்.

வேறொரு பக்கம் செல்வ மகளிரும், ஆடல் பாடல்களிற் சிறந்த மகளிரும் புதுப் புனல் ஆடி மகிழ்கின்றனர்; கரையில் உள்ள சோலைகளை அடைந்து, தம் கூந்தல்மேல் வெண்துகிலைச் சுற்றி முறுக்கி ஈரம் போக்குகின்றனர்; கூந்தலில் உள்ள ஈரத்தை அகிற் புகையிற் போக்குகின்றனர். அப்புகை நாலா பக்கங்களிலும் பரவி நறுமணம் வீசுகின்றது. பின்னர் அம் மகளிர் வையைக்கு வழிபாடு இயற்றுகின்றனர். தாம் கொண்டுவந்த பொன், வெள்ளி முதலியவற்றால் செய்வித்த மீன், நண்டு, இறால் முதலியவற்றை நீரில் செல்லவிடுகின்றனர். வறியவரிடம் பொருள் இன்மையை நோக்கி அவர் 'ஈ' என்பதைச் சொல்லுதற்கு முன்பே அறத்தை விரும்பி அவ்வேழைகள் விரும்பும் தானங்களைச் செய்கின்றனர். பாடல் மகளிர் புதுப்புனலை வாழ்த்திப் பாடுகின்றனர். அப்போது யாழ் வாசிக்கப்படுகிறது. முழவு, மத்தரி, தடாரி, தண்ணுமை என்னும் வாத்தியங்கள் ஒலிக்கின்றன. ஆடல் மகளிர் பாடலுக்கேற்ப மெய்ப்பாடுகளைக் காட்டி ஆடுகின்றனர். சில இடங்களில் பாணர்களும் பாடி ஆடுகின்றனர். இங்ஙனம் மைந்தரும் மகளிரும் ஆடிப்பாடி 'வறுமையால் துன்புறும் புலவரது வற்ற கைநிறையப் பொன்னைச் சொரியும் பாண்டியனைப் போலவே வையை வயலின்கண் பொன்னைப் பரப்பும் இயல்பு மாறாது ஓடுக! அஃது எல்லா உயிர்கட்கும் நன்மை செய்வதாகுக!' என்று வையையை வாழ்த்தி அக மகிழ்ச்சி கொள்ளுகின்றனர்.

பனி மிகுதலால் குளிரால் நடுக்குதலையுடைய முன்பனிப் பருவத்தில் மார்கழி மாதத்தில் கன்னிப் பெண்கள் தம் தாய்மாருடன் வைகறையில் வையைக்குச் சென்று நீராடுகின்றனர். அவர்கள் மார்கழி நோன்பை மேற்கொள்கின்றனர். அந்நோன்பு நோற்கும் முறைமையைச் சடங்கு அறிந்த முதிய பார்ப்பனிமார் காட்டுகின்றனர். விடியற்காலையில் குளிர்வாடை வீசுதலால் கன்னியர் வையைக் கரையில் அந்தணர் வளர்த்துவரும் தீயினிடம் சென்று குளிரைப் போக்குகின்றனர். நோன்பு இயற்றும் அக்கன்னியரை அந்தணர் ஆசிர்வதிக்கின்றனர்.

மார்கழி மாதத்தில் நீராடுகின்ற முதிய வாழ்வரசிகள், 'எம் கணவரும் யாமும் கிழவர் கிழவியர் எனப்படாமல் நிலையுறுதலையுடைய இளமையை இத் தைந்நீர் ஆடும் தவம் தரச் செல்வத்தோடுஞ் சுற்றத்தோடுஞ் நிலைபெறுக' என்று கூறுகின்றனர். தைந்நீர் ஆடும் கன்னிப்பெண்கள் வையையை நோக்கி, 'இனிய பரிபாடலை உடைய நறுநீர் வையாய், மின்னல் போன்ற இழையையும் நறுநுதலையும் உடைய மக்கள் தன்மை மேம்பட்ட கன்னிமை முதிராத யாங்கள், நின்னிடத்து இத் தைந் நீராடலை முற்பிறப்பிற் செய்த தவத்தாலே இப்பிறப்பிற் பெற்றேம். அதனை யாவரும் நயக்கத்தக்க முறையில் மறு பிறப்பினும் பெறுவோமாக', என்று கூறி மகிழ்கின்றனர். பின்னும் சில மகளிர், 'வையாய், மைந்தரும் மகளிரும் தம் பொருள்களைத் தானம்பண்ணி, அதன் பயனாகிய போகத்தை நுகர விரும்பி நாள்தோறும் உன்னிடம் நீராடுகின்றனர்; கையுறையாகப் பொன் மீன் முதலியனவும் அவர் அணிந்த சாந்து மாலையும் உண்டியும் நினக்குத் தருகின்றனர். ஆதலால் மழை வளம் சுரப்பதாக! அதனால் வெள்ளம் பெருகி நின் வளம் குறையாதிருப்பதாக!' என்று வாழ்த்திக் கூறுகின்றனர்.''

— ''வையை''



Madurai Municipal Chairman and Heads of Departments

மதுரை நகரசபைத் தலைவரும் பிரதம நிருவாக அதிகாரிகளும்



Madurai Municipal Office Building — மதுரை நகரசபை அலுவலகம்

# தமிழ் இலக்கியத்தில் 

 மதுரை மாநகரம்

(அ. கி. பரந்தாமனர், எம். ஏ.)

உலகம் ஒரு நிறையாத் தான்ஓர் நிறையாய்
புலவர் புலக்கோலால் தூக்க—உலகனைத்தும்
தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்
நான்மாடக் கூடல் நகர். (பரிபாடல்)

மதுரை மாநகரின் மாண்பு

மாண்புமிக்க மதுரைமாநகரம் தேனினும் இனிய தமிழ் வளர்த்த மாநகரம்; தண்ணூர் தமிழளிக்கும் தண்பாண்டி நன்னாட்டின் தலைநகரம்; ஈராயிரம் ஆண்டுகளுக்குக் குறையாத பழமைமிக்க இனிய நகரம்; தமிழகத்தின் கலைநகரம்; திருவிழாக்கள் மிகுந்த பெருநகரம்; தென்னகத்தின் தொன்னகரம். ஐரோப்பியர் மதுரை நகரைத் தமிழ்நாட்டின் 'ஏதன்ஸ்' என்பது மிகப் பொருத்தமானது,

## இலக்கியப் புகழ் மாலை

அமிழ்தினும் இனிய தமிழ் இலக்கியமும் இமிழ்கடல் உலகில் பழம்பெருமை பெற்றுள்ள மதுரைப் பதியும் பின்னிப்பிணைந்துள்ள அருமையை ஒருசிறிது தமிழ் கற்றோரும் நன்கறிவர். 'தமிழ் என்றால் மதுரை; மதுரை என்றால் தமிழ்' என்று கூறலாம், தமிழைவிட்டு மதுரையைப் பிரிக்க முடியாது; மதுரையைவிட்டு தமிழைப்பிரிக்கமுடியாது. 'தமிழ் கெழுகூடல் என்று புறநானூறு புகழ்கிறது. சிறுபாணாற்றுப் படையோ, ''தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனை மதுரை'' என்று மதுரையைக் குறைத்துக் கூறவந்த இடத்தில் சிறப்பித்துப் பாடுகிறது, பழம் பாடல் ஒன்று 'பாடுதமிழ் வளர்த்த கூடல்'' என்று பரவுகிறது. சிலப்பதிகாரம் என்னும் தண்டமிழ்க் காப்பியமோ, ''மதுரை மூதூர், மாட மதுரை, ஓங்குசீர்மதுரை, மதுரை மூதூர் மாநகர், தன்தமிழ் நன்னாட்டுத்திதுதிர் மதுரை,மாண்புடை மரபின் மதுரை, வானவர் உறையும் மதுரை, பதி எழு அறியாப் பண்பு மேம்பட்ட மதுரை மூதூர், மாடமதுரை மாநகர், மணிமதுரை என்று பற்பல சொற்றொடர்களால் மதுரை நகருக்கு நற்றமிழ்புகழ் மாலை சூட்டியுள்ளது. மதுரைக் காஞ்சி என்னும் நூல் ''புத்தேள் உலகம் கவினிக்காண்வர, மிக்குப் புகழ் எய்திய பெரும் பெயர் மதுரை'' என்று வான வரும் காணவிரும்பும் வளம்மிகுந்த மதுரை எனப் புகழ்ந்திருக்கிறது. மணிவாசகப் பெருமான், 'மதுரைப் பெருநன்மாநகர்' என்று திருவாசகத்தில் அருளிச்செய்தார், திருவிளையாடற் புராணம் பாடிய பரஞ்சோதி முனிவர், ''திக்கெலாம் புகழ் மதுரை'' என்றும் ''நன்னி இன்புறு பூமி மதுரை மாநகரம்'' என்றும்அருமைத்திருவாக்கால்அழகாகச் செப்பியுள்ளார். இங்ஙனம் எத்தனையோ கவிஞர்கள் இத்தொன்னகரைப் பாராட்டிப் பாடியுள்ளதை எழில்மிக்க தமிழிலக்கியத்தில் எங்கும் காணலாம்.

## பெயர்களும் காரணமும்

இத்தகைய புகழ்மிக்க மதுரையம்பதிக்கு நான் மாடக்கூடல், திருவாலவாய் முதலிய பெயர்கள் இலக்கியத்தில் வழங்கக் காண்கிறோம், பாமர மக்கள் மருதை என்று சொல்லக் கேட்கலாம். மதுவாகியதேவாம்ருதத்தைத் தெளித்துத்தூயதாக்கியதால் மதுரை என்றும் பெயர் தோன்றியது என்று புராணம் கூறுகிறது. வடமதுரையைப் பின்பற்றி மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்நாட்டில் குடியேறிய ஆரியர் தென்னாட்டில் இந்நகரத்துக்கு மதுரை எனப் பெயர் வைத்தனர் என்று வரலாற்றாசிரியர் பலர் கூறுவர். வரலாற்றுப் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் தமது தென்னிந்திய வரலாறு என்னும்நூலில் இங்ஙனம்குறிப்பிட்டிருக்கிறார்.

இங்கிலாந்திலிருந்து அமெரிக்க நாட்டிற்குக் குடியேறிய ஆங்கிலேயர் அமெரிக்காவில் ஒரு நகரத்துக்கு 'நியூ இங்கிலாந்து' என்று பெயர் வழங்கியது போன்று தென்னகத்துத் தமிழ்நாட்டில் குடியேறிய ஆரியர் வடமதுரையைப் பின்பற்றித் தென் மதுரைக்கு மதுரை எனப் பெயர் வழங்கியிருக்கலாம் என்பது ஒரு சிலர் கருத்தாகும். மதுரை என்பது வடமொழிப் பெயர் என்பதில் ஐயம் இல்லை. அழிந்த மதுரையின் பழைய எல்லையை ஆலவாய் (பாம்பு) காட்டியதால் ஆலவாய் என்னும் பெயர் தோன்றியதாகப் புராணம் கூறும். ஆலவாய் என்பதும் வடமொழிப் பெயரேயாகும். திருவாலவாய்' திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் ஆகிய ஊர்கள் சேர்ந்த காரணத்தாலோ, கன்னிகோயில், கரியமால் கோயில், காளிகோயில், ஆலவாய்கோயில் காவலாக அமைந்ததாலோ நான்மாடக்கூடல் என்னும் பெயர் உண்டாயிற்று என்பர். நான்மாடக் கூடல் என்னுஞ் சொற்றொடரே கூடல் என மருவியிருக்கிறது. பாமர மக்கள் மதுரையை மருதை என்பர். இதற்குக் காரணம் இல்லாமல் இல்லை, மருத மரம் நிறைந்த ஊர் மருதை எனலாம். வையையாற்றில் மதுரையில் திருமருதத்துறை என ஒரு துறை இருந்ததாகக் காண்கிறோம். 'திருமருதம் முன்றுறை' என்று பரிபாடல் மதுரை வையையாற்றின் ஒரு துறைக்குப் பெயர் வழங்கியதாகக் குறிப்பிடுகிறது. 'வருபுனல் வையை மருதோங்கு முன்துறை' எனச் சிலப்பதிகாரமும் கூறுகிறது. ஆதலால், மருதை என்னும் பெயர் ஒரு காலத்தில் மதுரைக்கு இருந்திருக்குமோ என ஐயம் உண்டாகிறது. ஆனால் தமிழ் நூல்கள் அனைத்திலும் மதுரை என்னும் பெயர் காணப்படுகிறதேயன்றி, மருதை என்னும் பெயர் காணப்படவேயில்லை. புலவர் பெருமக்கள் வடமொழிப் பெயருக்கே இடம் அளிக்கக் கருதினார்கள் போலும்.

## பண்டைய மதுரை எது?

பண்டைய இலக்கியங்களில் குறிப்பிட்டுள்ள மதுரை இன்றைய மதுரையா என்று கேட்க எண்ணம் தோன்றுகிறது. ஆம், அதை ஆராயவேண்டுவதுதான். நக்கீரர் தமது திருமுருகாற்றுப்படையில் மதுரைக்கு மேற்கே திருப்பரங்குன்றம் இருந்தது என்று பொருள்படுமாறு, 'மாடமலி மறுகின் கூடல் குடவயின்.. குன்றமர்ந்து உறைதலும் உரியன்' என்று குறிப்பிட்டிருப்பதைக் காணும்பொழுது இன்றைய மதுரை அன்றைய மதுரை அன்றுஎன்பது, உறுதியாகிறது. திருப்பரங்குன்றில் நிகழும் திருவிழாவின் ஓசை மதுரையில் கேட்கும் என்று பத்துப்பாட்டுள் ஒன்றான மதுரைக் காஞ்சியும் கூறுகிறது, பரிபாடல் என்னும் நூலும் திருப்பரங்குன்றையும் மதுரையையும் இணைத்துப்பாடுகிறது. இவற்றை நோக்கும்பொழுது அன்றைய மதுரை, கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் இருந்த மதுரை, இன்று மதுரைக்கு அருகிலிருக்கும் அவனியாபுரம் என்னும் பகுதியை இடமாகக் கொண்டிருக்கவேண்டும் என்று கருதலாம்.

## மதுரைக்காஞ்சியில் மதுரை

பத்துப் பாட்டுள் ஒன்றான மதுரைக் காஞ்சியில் கி. பி. 2ஆம் நூற்றாண்டு மதுரையைப் படம் பிடித்தாற்போல் காண்கிறோம். மதுரைக் காஞ்சியைப் பாடிய மாங்குடி மருதனார் மதுரையின் ஒரு நாள் வாழ்க்கையையே அருமையாக, நாம் வியக்கும்படியாக அற்புதமாகப் படம் பிடித்துக்காட்டி விரிவான செய்தியை விளக்கமுறத் தெரிவித்திருக்கிறார். அவர் கூறும் மதுரை நகரத்தில் புகுவோம்; காட்சிகளைச் கண்டு களிப்போம். அவர் கூறுவதாவது:—

''குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலங்களை அழகுறப் பெற்று விளங்கும் நற்றமிழ்ப் பாண்டிநாட்டுக்கு நடுவண தாய் மதுரையம்பதி அமைந்துள்ளது; வையையாற்றின் கரையில் இருப்பது; ஆழ்ந்த அகழியையும், உயர்ந்த மதிலையும் இடையறாமல் யாவரும் வந்துபோகும் வாயிலையும், நல்ல வீடுகளையும் உடையது; ஆறு கிடந்தன்ன அகல் நெடுந்தெருக்களைக் கொண்டது' தெருக்களிலே பலவகைக் கூட்டத்தாருடைய ஒலி மிகுந்திருக்கும். முரசறைவோர், விழாக் கொண்டாடுதலை அங்கங்கே அறிவித்துக்கொண்டு செல்வர். இசைக் கருவிகளின் இசையை விரும்பினவர்களுடைய ஆரவாரம் நிறைந்திருக்கும்.

நாளங்காடியும் (Day Pazaar) அல்லங்காடியும் (Night Bazaar) மதுரையில் உண்டு. கடைகளில் கொடிகள் கட்டப்பட்டிருக்கும். கள்ளுக்கடைகளி லும் கொடிகள் கட்டப்பட்டிருக்கும். (இன்ன கடைகள் என்பதைக் கண்டுபிடிப்பதற்கே கொடிகள் கட்டப்பட்டன.)

நாளங்காடியில் பூ விற்பாரும் மாலைகளை விற் பாரும் சுண்ணம் (Scented Powder) விற்பாரும் வெற்றிலை பாக்குவிற்பாரும் இருப்பார்கள். இவர்கள் படைகள் வரும்பொழுது அஞ்சி நடுங்கி ஒடி ஒதுங்கி யிருந்து, அப்படைகள் போனபின்பு தத்தம் இடங் களுக்கு வந்து விற்பனை செய்வார்கள்.

அல்லங்காடியில் சிவன் கோயிலில் வாத்தியங் கள் ஒலிக்கும், அங்கு வழிபாடு நடக்கும். பௌத்தப் பள்ளிகளும் அல்லங்காடியில் உண்டு, பெண்கள் தங்கள் குழந்தைகளையும் கணவன்மார்களையும் அழைத்துச் சென்று பூவும் புகையுமிட்டுப் புத்த பகவானைத் தொழுவார்கள். அங்கே அந்தணர் இருப்பிடங்களும் இருக்கின்றன. அறநெறி பிழையா அன்புடை நெஞ்சின் அந்தணர்கள் இவ்விருப்பிடங் களில் வாழ்கிறார்கள். சமணர் பள்ளிகளும் உள்ளன. இவையெல்லாம் ஒன்று சேர்ந்து பல மலைகள்போல விளங்கும். அறங்கூறு அவையத்தாரும், அமைச்சர் களும், பலபண்டங்கள்விற்பாரும், சங்குகளை அறுத்து வளையல் செய்வாரும், மணிகளைத் துளை செய்வாரும்' தட்டாரும், பொன் வாணிகரும், ஆடைகளை விற் பாரும், பூவும் சந்தனமும் விற்பாரும், சித்திரவேலை செய்பவர்களும், பிறரும்கூடி நிற்றலால் உண்டாகும் ஆரவாரம் அதிகமாகத் தோன்றும், பலாச்சுளை விற்பார் ஓசையும். மாம்பழம் விற்பவர் ஓசையும் கூடச்சேர்ந்து பேரொலியாக இருக்கும்.

மாலைக்காலம் நீங்கியதும் பரத்தையர் தத்தம் வீடு களில் அகப்பட்ட இளைஞர்களோடு மகிழ்ந்து விளை யாடிக்கொண்டிருப்பர். குழந்தை பெற்ற தாய்மார் கள் தீட்டுக் கழியக் குளத்தில் நீராடிவருவார்கள்' முதற் சூலையுடைய பெண்கள் தெய்வங்களுக்குப் படையல் படைத்துக்கொண்டிருப்பார்கள். மன்று தோறும் குரவைக் கூத்து நிகழும். சேரிதோறும் பாட்டுங்கூத்தும்நடைபெறும். இவ்வாறுமுதற்சாமம் (மாலை 6 மணி முதல் 9 மணி வரையில்) கழியும்.

இரண்டாம் சாமத்தில் (இரவு9மணி முதல் 12 மணி வரையில்) சங்குகளின் ஒலிஅடங்கிவிடக்கும்' கடைகளும் அடைக்கப்பட்டிருக்கும். அப்பவணிகர் அடையினையும் மோதகத்தினையும் தட்டுகளில் வைத்தவாறே உறங்கிக்கொண்டிருப்பர். நகர மக் களும் இனிதாக உறங்கிக்கொண்டிருப்பார்கள்.

மூன்றாம் சாமத்தில் (நள்ளிரவு 12 மணி முதல் காலை 3 மணி வரையில்) பேய்கள் திரிந்துகொண் டிருக்கும். துயிலாத கண்களையும் அஞ்சாமையை யும் ஆண்மையையும் உடைய ஊர்க்காவலர் (Police Constables) கள்வர்களை ஒற்றியறிந்து இளைப்பின்றி திரிந்துகொண்டிருப்பார்கள்.

விடியற்காலையில் (காலை 3 மணி முதல் 6 மணி வரையில்) அந்தணர் வேதங்களை ஓதுவார்கள். பாணர் மருதப்பண்ணை வாசிப்பர். குத்துக்கோல் காரர் யானைகளுக்குக் கவளம் கொடுத்துக்கொண் டிருப்பர். குதிரைகள் புல்லைத் தின்றுகொண்டிருக் கும். கடைக்காரர்கள் கடைகளின் முற்றங்களைச் சாணத்தால் மெழுகிக் கொண்டிருப்பார்கள். கள் விற்போர் கள்ளின் விலைகூறி விற்றுக்கொண்டிருப் பர். பெண்கள் தத்தம் வீடுகளைத் திறக்கும் ஒலி கேட்கும். பள்ளியெழுச்சி முரசம் ஒலிக்கும். காளை மாடுகள் ஆரவாரம் செய்யும்' சேவல்கள் கூவும். மயில்கள் அகவும். களிறுகள் பிளிறும். பெண்கள் முற்றங்களைக் கூட்டுவார்கள். இங்ஙனம் விடியற் காலை கழியும்.

அன்றைய மதுரையை இன்றும் காண்கிறோம். தெற்குக்கோபுர வாசலில் பலாச்சுளைகளை விற்பதை இந்நாளிலும் காணலாம். கூர்ந்து நோக்கினால் அன்றைய மதுரைக்கும் இன்றைய மதுரைக்கும் மிகுந்த வேறுபாடு இராது என்றே பார்க்கலாம்.

## பரிபாடலில் மதுரை

பரிபாடல் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று; இன்பத்தையே பொருளாகக்கொண்டு கடவுள் வாழ்த்து மலை விளையாட்டு, புனல் விளையாட்டு முத லியவற்றைக் கூறுவது. இந்நூலில் திருப்பரங்குன் றத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான் மீதும் மதுரை வையையாற்றுப்புனல்விளையாட்டைக் குறித்தும் பாடல்கள் உள்ளன. ஆதலால், மதுரை நகரைப்பற்றிய செய்திகள் சில இப்பரிபாடல்களில் இடம் பெற்றுள்ளன.

பரிபாடல் மதுரையில் நுழைவோம், நகர அமைப்பு முதலியன காண்போம். மதுரை வையை யாற்றுக்கு அருகில் இருந்தது. நகரின் நடுவில் கோயிலும் நாற்புறமும் தெருக்களின் பின் தெருக்களும் அமைந்திருந்தன. இவ்வமைப்புத் தாமரைப் பூவின் அமைப்பைச் செவ்வையாக ஒத்திருந்தது, தாமரை நடுவில் உள்ள பொருட்டினை ஒத்திருந்தது இறைவன் கோயில். பொருட்டினை சுற்றியிருக்கும் இதழ்களைப் போன்று தெருக்களும் இதழ்களைப் போன்று வீடுகளும் காணப் பெற்றன. பரிபாடல் இவ்வமைப்பினைப் பாடுகிறது. அப்பாடலின் அடிகள் இவை:—

''மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர்; பூவின்
இதழகத்து அனைய தெருவம; இதழகத்து
அரும்பொருட்டு அனைத்தே அண்ணல் கோயில்''

சேவல் கூவக் கோழி (உறையூர்), வஞ்சி (சேரர்தலை நகர்] மக்கள் எழுந்திருப்பார்கள்; ஆனால், மதுரை மக்கள் வேதம் ஓதக் கேட்டு படுக்கையிலிருந்து எழுந்திருப்பார்கள்.

வையைக் கரையில் நீராடுவோர் ஆடை முதலியவற்றால் அலங்கரித்துக்கொள்வதற்கு நலம்மிக்க மாடங்கள் கட்டப்பட்டிருந்தன. அவற்றுள் ஒன்று புலிமுக மாடம்' அது புலிமுகம் போல் அமைக்கப் பட்டிருந்தது. களிறு ஒன்று அம்மாடத்தைக்கண்டு உண்மைப்புலி யென்றே எண்ணி நடுங்கியது. மலர்களைக் குவிப்பதற்கும் பூ மண்டபங்கள் கட்டப்பட்டிருந்தன. சில இடங்களில் பொய்யாக் குலக்கொடியாம் வையை யாறு மதுரை மதிலை ஒட்டிச் சென்றது; வெள்ளம் பெருகிய காலத்தில் மதில்மீது மோதி நீரை அள்ளி வீசியது; 'வந்து மதுரை மதில் பொருஉம் வான்மலர் தா அய், அந்தண் புனல் வையை யாறு' என்னும் பரிபாடல் அடிகள் இதனை நன்கு புலப்படுத்துகின்றன. மதில்மீது அலைமோதிய அரவம் கேட்டு மதுரை மக்கள் துயிலுணர்ந்து எழுந்தனராம். ''உயர்மதில் நீர் ஊர் அரவத்தால் துயிலுணர்பு எழீஇ'' என்னும் பரிபாடல் அடி இக் கருத்தை வலியுறுத்தக் காணலாம், ''வையை தன் முற்றி மதில் பொருஉம் பகையல்லால் நேராதார் போர் முற்று ஒன்றும்'. அறியாது மதுரை என்று கலித்தொகை களிறுறக் கூறுகிறது.

மதிலின் புறத்தே வையைக் கரையில் இருந்த பூஞ்சோலை நடுவில் பாணர், கூத்தர் முதலியோர் வாழ்தற்கு என்று தனியாகப் பாக்கங்களும் சேரிகளும் இருந்தன.

மதுரையின் வடக்கே வையை ஓடியது, மேற்கே தண்பரங்குன்றம் தலை நிமிர்ந்து நின்றது.

மதுரைக் காஞ்சியிலும் பரிபாடலிலும் விரிவாக கூறப்பட்டுள்ள மதுரையும், அவனியாபுரப் பகுதியில் இடம்பெற்றிருக்கவேண்டும் என்றே கருதலாம். மதுரை மதில் வையை யாற்றுக்கு அரைக்கல் தொலைவில் இருந்திருக்கக்கூடும்.

## சிலப்பதிகாரத்தில் மதுரை

இளங்கோவடிகள் இயற்றிய நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தில் வெஞ்சமர் வரினும் அஞ்சாது போர் புரிவதற்கு ஏற்ற போர் கருவிகளும் அகழியும் காவற்காடும் பொருந்திய இஞ்சி (மதில்) சூழ்ந்த மதுரையைக் காண்கிறோம். ''பதியெழு அறியாப் பண்புமேம்பட்ட மதுரை மூதூர் மாநகர்'' என்று சிலப்பதிகாரம் செப்புகிறது. பகைவர் படையெடுப்பால் மதுரை மக்கள் எந்நாளும் மதுரையைவிட்டு ஓடியதில்லை என்றும் மதுரை பழமையான பெருமை மிக்க மாநகர் என்றும் சிலப்பதிகாரம் நலமுறக் கூறுவதிலிருந்து சிலப்பதிகாரக் காலத்து மதுரை நகர் பகைவர் படையெடுப்பைக் கண்டதே இல்லை என்று அறிகிறோம். பெருவீர மன்னர்கள் பாண்டிய நாட்டைத் தொடர்ந்து ஆட்சிபுரிந்துவந்த காரணத்தால் பெருநகர்மதுரை பகைவர் படையெடுப்பைக் கண்டதில்லை, மதுரை மதிலுக்குமுன் காவற்கா இருந்தது. மதிலைச்சுற்றி ஆழமான அகழி சூழ்ந்திருந்தது. மதிலில் கருவிரல் குரங்குப்பொறி, வளைவிடு பொறி, கல்லுமிழ் கவண்பொறி, எண்ணெயைக் காய்ச்சி மதிலேறுவார் மீது கொட்டும் மிடாக் எஃகு உலை, கல்லிடக்கொட்டும் கூடை, தூண்டி, வடிவான பொறி,கழுத்தில்பூட்டி முறுக்கும் சங்கிலி இரும்புக்கவை, அம்பு எய்வதற்குரிய ஏவறைகள், கொம்பால் குத்திகிழிக்கும் இரும்புப் பன்றிப்பொறி. நூற்றுவர் சொல்லிப் பொறிமுதலிய பொறிகள் மதிலில் எங்கும் அமைக்கப்பட்டிருந்தன. அக்கால மாபெரும் அரணே செஞ்சிரிட்கோட்டையோ என்றுசொல்லு முறையில் சிலப்பதிகார மதுரை மதிலரண் விளங்

யெது. இப்படிப்பட்ட அரணையுடைய மதுரையை எப்படி அக்காலத்தில் பகைவர்கள் கைப்பற்ற முடிந்திருக்கும்? ஆதலாற்முன் இளங்கோ வடிகள் ''பதியெழு அறியாப் பண்புமேம்பட்ட மதுரை மூதூர் மாநகர்'' என்முர். அவர் கூறியது மிக மிக உண்மையாகும்.

குன்றத்தனை செல்வத்தையும் மாதவிபால் தொலைத்தொழித்த கோவலன் கண்ணகியை அழைத்துக்கொண்டு வாணிகம் செய்து இழந்த பொருளை ஈட்டும் பொருட்டு மதுரை நோக்கிப் புறப்பட்டான், வழியில் கவுந்தி அடிகள் என்ற சமணப் பெண் துறவியும் கோவலனுக்குத் துணையாகப் புறப்பட்டாள். கோவலனும் கண்ணகியும் கவந்தியடிகளும் திரிசிரபுரச்சாலை வழியாக நடந்து அழகர் மலைப் பக்கமாக மதுரைக்கு வந்து சேர்ந்து' வையையின் வடகரையில் மக்கள் நடமாடாத துறையில் படகேறித் தென்கரையை அடைந்து' மதுரை நகரை வலமாக வந்து வையை யாற்றுக்குக்கு அருகில் கீழ்த்திசை வாயிலுக்கு அயலதாகிய புறஞ்சேரியில் அமைந்திருந்த முனிவர் இருப்பிடத்தில் தங்கினுர்கள். கவுந்தி யடிகள் கோவலனுக்கு மாலைக்குள் புறஞ்சேரியை விட்டு அகநகரில் போய்த் தங்குமாறு கட்டளையிட்டாள். கோவலன் நகரைப் பார்த்து வரச் சென்முன். தற்செயலாக முனிவர் இருப்பிடத்துக்கு வந்த மாதவியிடம் கவுந்தி யடிகள் கண்ணகியை ஒப்படைத்து பாதுகாக்குமாறு வேண்டினுள். மாதவி கவுந்தி யடிகளின் வேண்டுகோளுக்கிக் கிணங்கிக் கண்ணகியை அழைத்துக் கொண்டு மாலை நேரத்தில் ஆயர்பாடிக்குச் சென்முள். இதனை,

> ''நீட்டித்து இராது நீபோ கென்றே
> கவுந்தி கூற உவந்தனள் ஏத்தி
> முளையிள வெண்பல் முதுக்குறை நங்கை
> யொடு
> சென்ற ஞாயிற்றுச் செல்சுடர் அமையத்து
> மிளரிம் கிடங்கும் வளைவிற் பொரியும்
> .................
> .................
> ஞாயிலும் சிறந்து நாட்கொடி நுடங்கும்
> வாயில் கழிந்துதன் மனைபுக் கனளால்
> கோவலர் மடந்தை கொள்கையிற்
> புணர்ந்தென்''

என்று இளங்கோவடிகள் உளங்கொள எடுத்தியம்புகின்முர்.

சிலப்பதிகாரக் காலத்து மதுரை அகநகர் சிறிதாக இருந்திருக்கும் போல் தெரிகிறது. கோவலன் கொலையுண்டதைக் கேட்ட கண்ணகி முதலில் தன் கணவன் வெட்டுண்ட இடத்திற்குச் சென்று தரை மீது பொடியாடிக் கிடந்த கணவன் உடலைக் கண்டு வருந்தி யழுது, பின்பு அரண்மனை அடைந்து உண்மையை நிலைநாட்டி, மதுரையை மும்முறை வலம் வந்து எரியூட்டினுள் என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

> ''வலமுறை மும்முறை வாரா வலம் வந்து
> மட்டார் மறுகில் மணிநகிலை வட்டித்து
> விட்டாள் எறிந்தாள் விளங்கிழையாள்''

என்னும் சிலப்பதிகார அடிகளால் இக்கருத்தை நன்கறியலாம். கவுந்தி யடிகளும் மதுரைக்குள் நுழைந்த பொழுதும் வலமாக வந்தே கீழ்த்திசைப் புறஞ்சேரியில் தங்கினுர்கள். மும்முறை வலம் வரக் கூடியதாக இருந்தது என்றுல் அன்றைய மதுரை சிறிதாக இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை, இப்பொழுதுள்ள மதுரையைத் தள்ளியே சிலப்பதிகார மதுரை நகரம் இருந்திருக்கும்.

பழங்காநத்ததுக்கு எதிரில் கோவலன் பொட்டல் என்று ஓரிடத்தில் குறிப்பிடப்படுகிறது. அவ்விடம் கோவலனை வெட்டிய இடம் போலும், கொலைக்களம், அகநகருக்கு வெளியே இருப்பது வழக்கம். கோவலன் பொட்டலுக்கும் இன்றைய கீழவாசலுக்கும் இடையே சிலப்பதிகார மதுரை இருந்திருக்கக்கூடும் என்று யூகிக்கலாம்.

சிலப்பதிகாரக் காலத்து மதுரை நகரில் சிவபெருமான் திருக்கோயிலும் திருமால் கோயிலும் பலராமன் கோயிலும் திருமுருகன் கோயிலும் இந்திரன் கோயிலும் இருந்தன. இன்றைய சொக்கோயிலும் கூடலழகர் கோயிலும் அன்றைய கோவில்களல்ல; பிற்காலத்தில் தோன்றிய கோயில்கள். காமனுக்குத் திருவிழா நடந்தது.

பரத்தையர் வீதிகள் இருந்தன. நவரத்தினக் கடைவீதி. அறுவை வீதி (ஜவுளிக்கடை வீதி) முதலிய பல கடை வீதிகளும் இருந்தன. வெயிற் காலத்

தில் கடைகளுக்கு முன்னே பந்தல்கள் போடப்பட்டிருந்தன. இவ்வழக்கம் இன்றுமுள்ளது, கோவலன் மதுரைக்குள் ஆடித் திங்களில் வந்தான். அக்காலம் முதுவேனிற்காலம் ஆதலால், பந்தல்கள் போடப்பட்டிருந்தன. "கோவலன் பந்தல் நிழலில் திரிந்து மதுரை நகரைக் கண்டு புறஞ்சேரியை அடைந்தான்" என்று சிலப்பதிகாரம் கூறுவதால் வெயிற் காலத்தில் பந்தல் போடும் வழக்கம் அக்காலத்தில் இருந்ததென அறிகிறோம்.

## நாயக்கர் காலத்தில் மதுரை

சிலப்பதிகார காலத்தில் பதியெழு அறியாப் பண்பு மேம்பட்டிருந்த மதுரை, பிற்பட்ட நூற்றாண்டுகளில் பற்பல படையெடுப்புக்களைக் காண வேண்டிய துன்ப நிலை எய்தியது. மதுரை பட்ட பாடு தறிபடுமோ நாளல்தான் படுமோ என்றே சொல்ல வேண்டும். பண்டைப் பாண்டியர்கள் எந்த விதத் தொல்லையுமின்றிச் செந்தமிழ்ப் பாண்டிய நாட்டைச் சீரும் சிறப்புமாக ஆண்டார்கள். கி. பி. 3 ஆம் நூற்றாண்டின் இடையில் களப்பிரர் பாண்டிய நாட்டைக் கைப்பற்றி விட்டார்கள். ஏறக்குறைய மூன்று நூற்றாண்டுகள் பின்னரே பாண்டிய நாடு கடுங்கோனால் மீட்கப் பட்டுத் தன்னாட்சி பெற்றது. ஆனால், கி. பி. 10 ஆம் நூற்றாண்டில் சோழர்களுக்குப் பாண்டிய நாடு மீண்டும் அடிமையாயிற்று. கி. பி. 13 ஆம் நூற்றாண்டில் ஜடாவர்மன் குலசேகரன் பாண்டிய நாட்டை மீண்டும் கைப்பற்றினான். மூன்று நூற்றாண்டுகள் பாண்டிய நாடு முன்னைய பேரரசு நிலையோடு விளங்கியது. ஆனால், 14 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மாலிக்காப்பூர் குஸ்ருகான், உலுக்கான் ஆகிய இவர்களுடைய தொடர்ச்சியான படையெடுப்புக்களால் பாண்டிய நாடு இடை முறிந்து, தன்னாட்சி இழந்து இருந்த இடம் தெரியாது மாண்டு மறைந்தது. நூக்ளக் ஆட்சியில் தமிழ் நாடு முழுவதும் புகுந்து அடிமையாகி விட்டது. முஸ்லீம் ஆட்சி மதுரையில் 44 ஆண்டுகள் நடைபெற்றது. இம் முஸ்லீம் ஆட்சி காலத்திலும் மதுரையைச் சுற்றி மதில் இருந்தது. கியாஸ்–உதின் தம்காவி முஸ்லீம் ஆதிக்கத்தை எதிர்த்த ஹொய்சள நாட்டு மன்னனான 80 வயதுடைய மூன்றாம் வீர வல்லாளனைக் கொன்று தோலை உரித்து அதில் வைக்கோலை அடைத்து அந்தியாக மூர்த்தியின் திருவுடலை மதுரை நகர மதிலில் தொங்க விட்டிருந்ததாகவும் 1342 ல் இபுன் தூதன் என்ற முஸ்லீம் அதனைக் கண்டதாகவும் தென்னிந்திய வரலாறு கூறுவதால் இவ்வுண்மை புலனாகிறது.

அப்பொழுது வளர்ச்சியுற்று வந்த விஜய நகரப் பேரரசின் சார்பில் புக்கர் மகனான இரண்டாம் கம்பண்ணர் தமிழ் நாட்டின் மீது படையெடுத்து வந்து முஸ்லீம் ஆதிக்கத்தை ஒழித்துத் தமிழ் நாட்டை விஜய நகரப் பேரரசில் இணைத்து விட்டார். 1529 ல் விஸ்வநாத நாயக்கர் மதுரையில் தங்கி மதுரை நாட்டை ஆளத் தொடங்கினார். இவருடைய பரம்பரையினர் மதுரை நாட்டை ஏறக்குறைய 200 ஆண்டுகள் ஆட்சி புரிந்தார்கள். இந்த நாயக்கர் காலத்திற்றான் இற்றைய மதுரை மாநகர் உருவாயிற்று. இரண்டாம் கம்பண்ணர், முஸ்லிம்களால் இடிக்கப்பட்டு மீனாட்சியம்மன் கோயில் மதிலையும் கோபுங்களையும் கட்டுவித்தார். விஸ்வநாத நாயக்கர் கோயிலைச் சீர்செய்ததோடு அக்கோயிலை நடுவிடமாக வைத்துச் சுற்றித் தெருக்களை அமைத்து அழகாக மதுரை நகரை உருவாக்கினார். விஸ்வநாதர் வழி வந்த திருமலை நாயக்கர் (1623–1659) தலை நகரை மதுரைக்கு மாற்றிக் கோயிலில் பல திருப்பணிகள் செய்ததோடு கலைச் சிற்பங்கள் மலிந்து விளங்கும் கவின்மிகுந்த புது மண்டபம், ஒப்புயர்வற்ற காட்சியளிக்கும் தெப்பக் குளம், கோடை விடுதியான தமுக்கம், தமிழகத்துத் தாஜ்மஹால் என்னும் நாயக்கர் மஹால் இவற்றை அமைத்துக் கலைநகரமாக்கினார்; திங்கள் தவறாது திருவிளையாடற்புராண விழாக்கள் நடக்குமாறு சித்திரைத் திருவிழாவை எத்தரையோரும் இத் தொன்னகர் மதுரைக்கு வந்து காணுமாறு சீரும் சிறப்புமாக நடைபெறச் செய்து ரயில் நேர அட்டவனை ஏடு பாடுறக் குறிப்பிடும் திருவிழா நகரமாக்கினார்.

## முடிவுரை

மதுரைமாநகரம் பண்டைக் காலத்தில் எண்டிசையும் புகழத் தமிழ் வளர்த்த பெருமை பெற்றிருந்தது; மூதூர் மாநகர் என்ற சிறப்புற்றிருந்தது; இன்பம் தரும் தமிழ் இலக்கியத்தில் நடமாடும் எழில் பெற்று விளங்கியது. விஸ்வநாத நாயக்கராலும் அவருடைய மதியமைச்சரும் சேனைத் தலைவருமான தளவாய் அரியநாத முதலியாராலும் இன்றைய அழகு மிக்க மதுரை உருவாகியது; கலை மலிந்த திருமலை நாயக்க மன்னரால் நிலைபெற்ற கலைநகராகும் பெருமையுற்றது. மதுரைமாநகர் மன்றமும் அச்சிறப்புக்களைக் குன்றாது குறையாது என்றும் நிலைக்குமாறு மாண்புறத் தொண்டாற்றி வருகிறது. பொது மக்கள் பூ மணம் வீசிய மதுரையை நிமணம் நாறும் மதுரையாகச் செய்துவிடலாகாது; அன்று பொதுமக்கள் வையையாற்றை மக்கள் இனிது நடமாடும் மாண்பு மிக்க இடமாகச் செய்தார்க்ள்- இன்றைய பொது மக்களோ வையையாற்றுப் பகுதியைச் சுகாதாரமற்ற இடமாகச் செய்து விடுகிறார்க்ள். மதுரைப் பொது மக்களே, மதுரைமாநகரைத் 'தீது தீர்' மதுரையாக்ச் செய்யுங்கள்; இனிய எழில் மிக்க சுகாதாரமுள்ள மதுரையாக்ச் செய்யுங்கள். உங்கள் ஒத்துழைப்பை மதுரமாநகர் மன்றத்துக்கு அளித்துக் காண வரும் அயல் நாட்டார் கண்டு போற்றும் காட்சி மிக்க மாட்சியுள்ள நகராகச் செய்யுங்கள், மதுரை மாநன்னகரே நீ வையையாற்று மணலினும் நீடு வாழ்க!



Mariamman Teppakulam, Madurai — மாரியம்மன் தெப்பக்குளம், மதுரை

# "கூடல் மதுரை"

[ பேராசிரியர் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, தியாகராசர் கல்லூரி ]

நம் தமிழகத்துக்கு அரசியல் தலை நகராக இருந்தவை சேரநாட்டு வஞ்சியும் சோழநாட்டு உறையூரும், நம் பாண்டிய நாட்டு மதுரையுமாம் வஞ்சி மேலைநாட்டுப் பொன்னுக்கும், உறையூர் ஒழுக்கங் கூறும் அறத்துக்கும் புகழ்பெற்று விளங்க, மதுரை தமிழகத்துக்குரிய கலை, பண்பாடு நாகரிக ஒழுக்க நெறியால் மேம்பட்டுத் தமிழக முழுதும் தலைவணங்கத்தக்க தலைமைச் சிறப்பால் "தமிழ் கெழு மதுரை" என்னும் தனிச்சிறப்பு அமைந்து நின்றது. இம் மதுரைக்குக் "கூடல் மதுரை", "ஆலவாய் மதுரை" என்ற சிறப்புப்பெயரும் உண்டு. மன்னர் அரசிருக்கை மதுரை யெனவும், புலவர் கூடும் பேரவைச் சூழல் கூடல் எனவும், இறைவன் இருக்கை ஆலவாய் எனவும் வழங்கின. "மறுவில் மானவர் மலிந்த மூதூர், வெறிது சேறல் விழுப்ப மதன்றெனக்கான வாழைத் தேனுறு கனியும்", பூவும் போதும் பிறவும் கொணர்ந்து "புனல் யாறன்றிது பூம்புனல் யாறென"ச் சான்றோர் பரவும் வையை யாறு மாண்புற்று விளங்குவது மதுரை நகர். இவ்வையை யாறு மேலைப் பொருப் பிலே தோன்றி, பாண்டி நாட்டாகிய ஏட்டிலே தவழ்ந்து இரு மருங்கும் துறைகள் பல பெற்றுள்ளது. பொருப்பி லிருந்து இறங்கியதும் உடனிறங்கும் ஏனைக் காட்டாறுகளோடு கூடும் கூடல் ஒன்றை அப் பொருப்பின் அடியிலேயே வையை பெறுகிறது. அதனை இடைக்காலக் கல் வெட்டுக்கள் "அளநாட்டுக் கூடல்" என அழகிய பெயர் கொடுத்துச் சிறப்பிக் கின்றன. பின்னர்க் கோடை மலையில் தோன்றிப் பெரியகுளம் வழியாக வரும் காட்டாறு வந்து கூடும் கூடல் பெருந் துறை ஒன்றுளது. சங்க இலக்கியங்கள் அத்துறையினைத் "திருமருதந்துறை" என உரைக்கின்றன. இடைக்காலத்திலே அது "திருமருதந்துறையான கூடல்புரம்" என வழங்கி, இப்பொழுது, அது குள்ளபுரம் என மருவி வழங்குகிறது. கூடல்புரம் எங்கே? குள்ளபுரம் எங்கே? அதற்குக் கிழக்கே உள்ள மற்றொரு கூடல் மதுரையாகும். இங்கே ஆறுகள் கூடுவது இல்லையாயினும் கடல் நோக்கிச் செல்லும் பேராறுகள் போலப் புலவர் பெருமக்கள் வந்து கூடுவர். அதனால் மதுரை "தமிழ்க் கூடல்" என்ற மாண்பு பெறுவதாயிற்று. விழாச் சிறப்புக் கெனப் பிற துறைகளில் மக்கள் கூடி நின்றனர். தமிழ்ச் சிறப்புக்கெனப் புலவர் கள் மதுரையில் கூடி மகிழ்ந்தனர்.

பண்டுதொட்டே தமிழ்க் கூடல் வளர்த்த தனிச் சிறப்போடு வரலாற்றுச் சிறப்பும் வணிக வளமும் செல்வப் பொலி வும் பெற்றுச் சிறந்த பெருமை மதுரை நகர்க்கே உரியது. இங்ஙனம் எல்லாத் துறைகளிலும் நிலை சிறந்து நின்ற தலை நகராக மதுரை விளங்கியதால் "தேன் தமிழ்நாட்டுத் தீதுதீர் மதுரை" என்று இளங்கோவடிகளும், "திருவீற்றிருந்த தீது தீர் நியமத்து மாடமலி மறுகின் கூடல்" என்று நக்கீரனாரும் போற்றிச் சிறப்பித் தனர்.

நாட்டு மொழியின் பற்றுக்கும் வளர்ச்

சிக்கும் ஏற்பவே நாட்டு மக்கள்பால் நல்லுணர்வும் பண்பாடும் அமையும் என்பது அறிஞர் முடிபு. மொழி வளர்ச்சிக்கும், மொழித் தூய்மைக்கும் முதலிடம் தந்து போற்றும் சிறப்பினை மதுரை பண்டு தொட்டே பெற்றுவருகிறது. "பாண்டியன் வளர்த்த பைங்கொடி" எனத் தமிழன்னையைப் பேசுதலும் இதனாலேயே என அறியலாம். அறிவாற்றலில் சிறந்து நின்றதையும், இறவா இலக்கியங்கள் இயற்றியதையும் காட்டியே கிரேக்க நாட்டைப் போற்றுவதை மேலைநாட்டறிஞரிடம் நாம் காணலாம். மக்கள் மனவளமும் குடி நலமும் வேந்தனது இறைமாட்சியால் தெளிவாக அறியலாம். நீதியும், நேர்மையும் அரசின் இரு கண்களாகக்கொண்டு அற நெறி வழுவாது அரசோச்சியவர்களை நாடு காக்கும் வேந்தர்களாகப் பெற்று மதுரை ஆட்சித்துறையில் சிறந்து நின்றது என வரலாறு வழங்குகிறது.

வல்வினை வளைத்த கோலை மன்னவன் செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோலாக்கிய செம்மை மதுரையாண்ட மன்னரது ஆட்சியின் மாட்சியாகும். விருந்தோம்பும் பெரும் பண்பு இங்கே சிறந்து நின்றதைக் கோவலனுக்கும் கண்ணகிக்கும் அடைக்கலம் தரும் காதையில் சிலம்பு ஒலிக்கக் காணலாம். ஆயர் மகளாய மாதரி கண்ணகிபால் காட்டும் அன்பும் பரிவும், தன் மகளைத் தோழியாக்கும் நற்பண்பும் நனி நாகரிகமும் நாம் வியத்தற்குரியன.

மதுரை நகர் கடல் துறைமுகமாக அமையாதொழியினும் வையை யாறு புனல் பெருக்கெடுத்தோடிய அருகக் காட்சியளித்ததென அறிகிறோம். வடக்கண் இருந்து இம்மூதூர்க்குச் செல்வோர் வையையாற்றைக் கடந்தே நகரை அடைய வேண்டியிருந்தது. இது மிக்க நீர்ப் பெருக்கினை யுடையதாகலான் இதனை நாவா யேறியே கடந்து சென்றுள்ளனர். அதற்காக, வையையில்,

> "பரிமுக அம்பியும் கரிமுக அம்பியும்
> அரிமுக அம்பியும் அருந்துறை இயக்கும்
> பெருந்துறை மருங்கில்"

இருந்தன. புறஞ்சேரியிலிருந்து இம் மாநகர்க்குச் செல்ல சுருங்கை வழி (Tunnel) ஒன்று இருந்தது. அச் சுருங்கை வழியின் முடிவில் நகரின் மதில் வாயிலும் அங்கே வாளேந்திய வீரர் காவலும் அணி பெற அமைந்திருந்தன. வாயிலை அடுத்துப் பெருஞ்செல்வம் மலிந்த பெருவீதிகள் காணப்பட்டன. அரசர் வீதியும், கலைவல்ல கலைஞர் வீதியும், பீடிகை வீதியும், அங்காடி வீதியும், மணி வகைகளை ஆராய்ந்து காணும் வண்ணக்கர் வீதியும், பொன்வகை தெரியும் பொற்கடை வீதியும், அறுவை வீதியும், கூல வீதியும் நின்று சிறந்ததைச் சிலப்பதிகாரம் காட்டுகிறது. அறுவை வீதிகள்,

> "நூலினும் மயிரினும் நுழைநூற் பட்டினும்
> பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து
> நறும்புகை சேறிந்த அறுவை வீதி"

என்று சிறப்பிக்கப் பெறுகின்றன. அங்காடி வீதியில் வாள் வேந்தர்க்கு வேண்டும் வையமும் வண்டியும் வாளும் வேலும் வடிக்கப்பட்டன. இவ் வீதிகளே யன்றி மன்றமும் மறுகும் சந்தியும் சதுக்கமும் எனப் பல வீதிகளும் சேறிந்து நின்றன. இந்நகரின் மதிலிடத்தே பலவகைப் பொறிகள் இருந்தன. அவற்றை இளங்கோ வடிகள் "வளைவிற் பொறியும், கரவிர லூகமும், கல்லுமிழ் கவணும், பரிவுறு வெந்நெயும், பாகடு குழிசையும், காய்பொன் உலையும், கல்லிடு கூடையும்" எனப் பல

இருந்தன எனக் காட்டுகின்றார். இதன்கண் வரும் கல்லுமிழ் கவண் என்பது பதிற்றுப் பத்தால் விளக்கப்படுவதால் இது ஆர்க்கி மிடீஸ் என்னும் யவனப் புலவன் தன் நாட்டு வேந்தர்க்குச் செய்துதந்த கல்லுமிழ் கவண் என்ற போறியாக இருக்குமோ என்று நினைத்தற்கு இடமுண்டாகிறது. இப் போறிகளின் அமைப்பும் உருவமும் ஆராய்ந்தறிந்தால் உண்மை உறுதிப்படும்.

இங்ஙனம் சிறந்த மதுரைமா நகர் நாள்தோறும் உலகு கண்டுவரும் அறிவியல் ஆக்கத்தாலும் அன்றாட மாறுதலாலும் பெருஞ் சிறப்புப் பெற்று வருதல் கண்கூடு. அறிவுநலம் செய்யும் கல்லூரிகளும், போருள்நலம் விளைவிக்கும் ஆலைகளும், அரசியல் அறிவூட்டும் நாளிதழ்களும் இங்கு பெருகிவருகின்றன. நகராண்மைக் கழகமும் நகர மக்களுக்கு ஒல்லும் வாயெல்லாம் உறுதுணையாய் நின்று செயலாற்றி வருகிறது. ஒரு காலத்தே மேலை நாட்டு யவனரும், கீழைநாட்டுச் சீனரும் வியந்து பாராட்டிய சிறப்புடைய மதுரை நகரின் எழிலை அங்கயற்கண்ணி தன்னோடும் அமர்ந்த ஆலவாயண்ணல் ஆலயமும், சிற்பச் சிறப்புக்குச் சிறப்புடைய எடுத்துக்காட்டாக நிற்கும் நாயக்கர் அரண்மனையும் மிகுத்துக் காட்டுகின்றன. கலையும் கூத்தும் காவியமும் ஓவியமும் களிநடம் புரிந்து கலை வளர்த்தலை நகராகிய மதுரையில் கலை அரங்கங்கள் நிறுவும் புது முயற்சிகளை அறிஞர்களும் கழகங்களும் செய்வது போற்றுதற்குரியது. இந் நலங்களைக் கருத்திற்கோண்டு மதுரை நகரின் வனப்பைப் போருட்காட்சிகளாலும் பூங்காக்களாலும் போலிவுறுத்தும் மதுரை நகராண்மைக் கழகத்தின் முயற்சியும் பணியும் முழு வெற்றியும் பெறுவதாகுக!



# வீடு ஒரு கண்காட்சி சாலை.

[ச. கு. கணபதி ஐயர்.]

பொருட்காட்சி, கண்காட்சி இவை இரண்டும் பொருளில் வேற்றுமையுடையன. கைத்தொழில், கலைகள் இவைகளின் வளர்ச்சி தற்கால நிலை முதலியவற்றைப் பொதுமக்களுக்கு விளக்கும் வகையில் ஒரு சில நாட்கள் வரையில் நிறுவும் காட்சி பொருட்காட்சி ஆகும். நாட்டில் தொழில்கள், கலைகள் எவ்வாறு இருக்கின்றன? எவ்விதம் நடைபெறுகின்றன? என்பன போன்ற விவரங்களைப் பலவகைகளில் விளக்கிக்காட்டும் இடம் பொருட்காட்சி சாலையாகும். நாட்டின் கலைகளுக்கும் தொழில்களுக்கும் பொருட்காட்சி விளம்பரமாகும்.

கண்காட்சி என்பது பழமை (Antiquity), வரலாறு (History), இயற்கை சாஸ்திரம் (Natural-Science), கலைகள் (Arts) முதலியவற்றைப் பற்றிய அறிவை மக்களுக்குப் போதிக்கும் பொருட்காட்சியாகும். மேலே கூறிய பாடசம்பந்தமான பொருள்கள் பல விவரங்களோடு ஒழுங்குப்படுத்தப்பெற்றுள்ள இடம் கண்காட்சிசாலையாகும். பொருட்காட்சியைப்போன்று கண்காட்சி சில நாட்கள் மட்டும் இருப்பதன்று. தன்னைத்தேடிவருபவர்களுக்கு நிரந்தரமாக இருந்து கொண்டு அறிவைப்புகட்டுவது.

பாரத நாட்டில் இந்த இருவகைக்காட்சிகளும் சரித்திரகால முதல் இருந்து வருகின்றன. ஆனால் இவைகளை நம்மவர் வேறுவேறாகப்பிரித்து உணரவில்லை. கண்காட்சி வேறு, பொருட்காட்சிவேறு, என்ற வேற்றுமையை உணராமல் இரண்டின் கலப்பாகும் காட்சியாலேயே அறிவைப்பெற்று வந்திருக்கிறார்கள். புண்ணியஸ்தலங்கள், க்ஷேத்திரங்கள் என்று பாராட்டும் பெரிய நகரங்களே இவ்விதக் காட்சிகளின் இருப்பிடம்.

க்ஷேத்திரங்களுக்கு யாத்திரிகர்கள் நாட்டின் பல பாகங்களிலிருந்து வருவார்கள். ஆதலால் அரிய தொழில்கள் அங்கேயே நிறுவப்பெற்றன. யாத்திரிகர்கள் அந்தப்பொருள்களைவிலைக்குவாங்கித்தொழில்களை ஆதரித்தார்கள். அவர்களில் சிலர் தாம் கண்ட தொழில் நுட்பங்களைத்தம் சொந்த ஊர்களில் புகுத்தியிருக்கிறார்கள். நம்நாட்டில் தொழில், கலை, கல்வி முதலியன பழங்காலத்தில் இவ்விதம் நாடெங்கும் பரவியது.

ஒவ்வொரு கோவிலும் சிற்பக்கருவூலமாகும். இதிகாச, புராணக்கதைகளை மக்களுக்கு இந்தச் சிற்பங்கள் விளக்குகின்றன. சிற்பங்களே அன்றி கோபுரங்களில் சுண்ணவடிவங்களும், சுவர்களில் வன்னச்சித்திரங்களும் அறிவின் கருவூலங்களாகும்.

நாட்டியம், இசை முதலிய நுண்கலைகள் அக்காலத்தில் கோவில்களை ஒட்டியே வளர்ச்சியுற்றன. கருங்கக்கூறின் கோவில்கள் இக்காலக் கண்காட்சிசாலைகளை நினைவூட்டுகின்றன. கோவிலுள்ள ஸ்தலங்களில் நடைபெறும் சிறப்பான தொழில்கள் இக்காலப் பொருட்காட்சிகளை நமக்கு நினைவூட்டுகின்றன.

கோவில்களைச்சார்ந்த கலை முதலியவை போன்றவற்றைப் பழங்கால அரசர்கள் தம் அரண்மனைகளில் அமைத்துக்கொண்டனர். ஓவியம், சிற்பம், கட்டடக்கலை முதலியவையே அன்றி அழகிய உபவனம், அதில் பல அரிய பிராணிகள் முதலியன அரண்மனையைச்சார்ந்து பொலிவுபெற்றன. தேவாலயத்துக்குக் 'கோவில்' என்ற பெயர் 'அரசனது விடு' என்ற பொருளிலேயே அமைந்துள்ளது என்றால் அரண்மனையில் வளர்ந்து வந்த கலையின் பெருமையைச் சொல்லவேண்டுவதில்லை.

கோவிலும் அரண்மனையும் போன்று நம் நாட்டில் நாளடைவில் விடுகளும் கண்காட்சிக்கூடங்கள் ஆயின. விட்டின் கதவுகள், தூண்கள், விட்டங்கள், சுவர்கள் எல்லாம் சிற்பச்சித்திர வேலைப்பாடுகளைப் பெறலாயின. அரிய படங்கள், அணிகள், கலன்கள் முதலியவற்றை வீட்டார் அரிதில் தேடி வைக்கலானார்கள். அவர்கள் உபயோகித்து வந்த பாத்திரங்களில் கூட உருவங்கள், பூ வேலைகள் முதலியன இடம்பெற்றன. மணவிழாவின் போது மணமகனுக்குச்செய்யும் சீர்வரிசைகள் அரிய பொருள்




Madurai Municipal Travellers Bungalow — மதுரை நகரசபை முசாபரி பங்களா



Sree Meenakshi Nilayam — ஸ்ரீ மீனாக்ஷி நிலையம்

பிரயாணிகள் தங்குவதற்கு வசதிமிக்க இடம், பஸ் ஸ்டாண்டு அருகிலுள்ளது

களை வீட்டார் தொகுத்து வந்தமைக்கு ஒரு சான்று ளும். 'எங்கள் பாட்டனர் உபயோகித்து வந்த பெட்டி இது, எங்கள் முப்பாட்டி எசயாண்டு வந்த பாத்திரம் இது' என்று இப்படிப் பல பொருள்களை இன்றும் பலர் போற்றிப்பாதுகாத்து வருகிறார்கள்.

ஒவ்வொரு வீட்டாரும் பல கலங்களில்தாம் தேடி வைத்த அரிய பொருள்களைப் பலர் காணும்படி காட்சியாக வைப்பதை ஒரு விழாவாகக் கொண்டாடும் வழக்கம் நம்நாட்டுக்கே உரியது. அதுதான் நவராத்திரிப்பண்டிகை. எந்தப்பண்டிகையும் ஒரு நாள் இருநாளில் முடிந்துவிடும். கலைகளின் பண்டிகையாகிய நவராத்திரியை நம்மவர் விஜயதசமி உட்பட பத்து நாளைச்சிறப்பாகக் கொண்டிருக்கிறார்கள். இந்த உன்னதமான பொருட்காட்சித்தத்துவம் இந்தக்காலத்தில் தேய்ந்து மழுங்கி மாசுபடிந்து வேறு வடிவுடன் காட்சியளிப்பதாக இருந்தாலும் அது ஏற்பட்ட காலத்தில் எந்த நோக்குடன் நிறுவப்பட்டது என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

வீட்டிலே கண்காட்சிப்பொருள்களை வைத்து ஒழுங்கு படுத்த வேண்டும் என்ற விருப்பம் இக்காலத்தில் பரவி வருகிறது. முறைகளும் தற்கால விஞ்ஞான ரீதியில் ஒழுங்கு பெற்றுள்ளன. பலஇடங்களில் கண்காட்சி, பொருட்காட்சிகளைக்காணும் வாய்ப்பும் புதிய புதியனவைகளாக வெளி வருகிற வீட்டுக்கண்காட்சிசாலையைப்பற்றி விவரிக்கும் ஆங்கில நூல்களும் வழிகாட்டிகளாக உள்ளன.

இயற்கை சாஸ்திரம் (natural Science) பற்றிய பொருள்களைத் திரட்டிவைத்தல் எளியமுறையாகும். இந்த நூலறிவு கடல்போன்றது. பல பிரிவுகளையுடையது. இவற்றுள் ஒன்றை மேற்கொள்ளலாம். கற்களில் பல வகை உள்ளன. அவைகளைத் தொகுத்து ஒவ்வொன்றுக்கும் விவரம் எழுதி வைக்கலாம். பறவைகளின் சிறகுகள், படங்கள், விலங்குகள், நீர்வாழ் உயிர்கள் முதலியவற்றின் படங்கள் பலவேறு காலத்து நாணயங்கள், தபால் தலைகள் முதலியவைகளைத் தொகுக்கலாம். தொகுப்பு எவருக்கும் எளிதாகும். தொகுத்தவற்றைப் பலவேறு பிரிவுகளாக வகுப்பது முக்கியம். வகுத்த பொருள்களுக்கு எழுத்தில் விளக்கங்கள் அவசியம்.

இந்தக் காலத்தில் பழைய புத்தகக் கடைகளில் பழம் சஞ்சிகைகள் மலிவாகக் கிடைக்கும். அவைகளை வாங்கி வந்து அரியபடங்களைத் தொகுக்கலாம். புகைப்படங்களும் பலவிதமான தேதிப் படத்தாள்களும் (calendars) நல்லன.

ஒழுங்குபடுத்தும் முறையை ஓர் உதாரணத்தால் விளக்குவோம். எழுதுகருவிகளைப் பற்றிய கண்காட்சியை ஒருவர் தம் இல்லத்தில் நிறுவுவதாக வைத்துக்கொள்வோம். ஆதியில் மனிதன் எவைகளின் மேல் எழுத்தைப் பொறித்தான்? அப்படிப் பொறிக்க அவனுக்குச் சாதனமாக இருந்த எழுதுகருவிகள் எவை? அவை கால ரீதியில் மறைந்து இந்தத் துறையில் புதிய வளர்ச்சி ஏற்பட்டது எப்படி? எந்தப் பொருள்களால் ஏற்பட்டது? முதலிய விஷயங்களை எழுத்தால் விளக்கி அவைகளுக்கு ஆதாரமான கருவிகளாகிய கல்லெழுத்து, செப்பேடுகள், தோல், பனவோலை முதலியவற்றில் பொறிக்கப்பட்ட எழுத்து, எழுத்தாணி, இறகு பேனா, தூரிகை, பலவகை பென்சில்கள், பேனாக்கள், பலவித பேனா முட்கள், புதிய ஊற்றுப் பேனா வகைகள் முதலியவற்றை இந்தக் கண்காட்சியில் அவை தோன்றிய காலமுறையில் ஒழுங்குபடுத்தவேண்டும்.

தொடக்கத்தில் அரிய பொருள்கள் கிடைக்கா விட்டாலும் பிற்பாடு அவைகளில் சில கிடைக்கலாம் நல்லன கிடைக்கும்போது அவைகளைச் சாதாரணப் பொருள்கள் இருக்குமிடத்துக்கு மாற்றிவிடலாம் பல நாள் முயற்சியினால் தொகுப்பில் புதிய அரிய ரகங்கள் நாளடைவில் சேரக்கூடும். தகவல் விவரங்களும் பெருகும். வீட்டுக் கண்காட்சி இப்படி விரிவுறும்.

கண்காட்சியை வீட்டில் தனியே ஓரிடத்தில் அமைக்கவேண்டும். வீட்டுக்கு வரும் பலர் காண்பதற்கு ஏற்ற இடமாக அது இருக்கவேண்டும். தொடக்கத்தில் கண்ணாடிப் பெட்டி (show case) வேண்டாம். அலமாரிகளிலும் மேசைகளிலும் பொருள்களை வைக்கலாம். நம் வீடுகளில் பொம்மைக் கொலுவை எப்படி வைக்கிறார்களோ அப்படி வைக்கலாம்.

வீட்டுக் கண்காட்சி வீட்டிலுள்ளவர்களுக்கு முக்கியமாகச் சிறுவருக்கு அறிவையும், நல்ல பொழுது போக்கையும், அரியவற்றைத் தேடித்தொகுக்க வேண்டும் என்ற ஆர்வத்தையும் ஊக்கத்தையும் தரக்கூடும். பிறருடைய மதிப்பும் பாராட்டும் வீட்டாருக்குக் கிடைக்கின்றன. சமூகத்தில் அந்தஸ்து, தகுதி முதலியவை இந்தவிதங்களில் பெருகுகின்றன.

கலைமகளை நாம் போற்றுவது என்பது மலர்களைக் கொண்டு பூசிப்பதோ, கவிகளைக் கொண்டு துதிப்பதோ அன்று. மேலே கூறிய முறைகளில் தோன்றும் கலை விளக்கமே அவளுக்குச் செய்யும் உண்மை ஆராதனை.

# புத்திலக்கிய போக்கு

[ சா. கணேசன் ]



இருப்பதைச் சுட்டிக் காட்டி, இருக்கவேண்டியதை எடுத்து விளக்கிப் பாமரத் தன்மையைப் பண்பட்ட தன்மையாக மாற்றுவதே இலக்கியத்தின் தொழில் என்றெல்லாம் சொல்லுகிறோம். ஆனால், தற்கால இலக்கியத்தின் போக்கு இதை எவ்வளவு தூரம் மதித்துச் செல்லுகிறது என்பதைச் சற்று ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

இப்பொழுது கடன்வாங்கிப் பிழைப்பதே பெரும்பாலும் வழக்கமாகப் போய்விட்டது. சுயமான ஆக்கத்தைவிட அங்கிருந்தும் இங்கிருந்தும் கிடைக்கக்கூடியதை மொழிபெயர்த்தும் தழுவியும் வெளியிட்டு வருவதே பெருகிக் காணப்படுகிறது. ஏன் இந்த அவல நிலை? தத்துவ தரிசனம் பெறும் ஆற்றல் தளர்ந்து கிடப்பதாலேதான் என்று எளிதாகக் கூறிவிடலாம், மேலும் கலையை லட்சிய சித்திக்குரிய கருவியாகக் கருதாது பிழைப்புக்கேற்ற வழியாகக் கொண்டதாலும் என்று கூடச் சொல்லலாம்.

இலக்கிய கர்த்தா ஒருவனுக்கு இருவித நிலை உண்டு. ஒன்று, கலைஞன்நிலை; மற்றொன்று மனிதன் என்ற நிலை. கலைஞன் என்ற நிலையில் எப்பொருளையும் எம்முறையிலும் தன் கலை ஆக்கத்திற்குரிய பொருளாகக் கையாளலாம். ஆனால் மனிதன் என்ற நிலை அவனை ஒரு வரம்புக்குள் கட்டுப்படுத்தி உரிமையின் பரப்பை மட்டுப்படுத்துகிறது. இந்த உண்மைமட்டிலும் மதிக்கப்படுமானால் இன்று இலக்கியம் என்னும் போர்வையைப் போர்த்திக்கொண்டு உலவிவரும் அநேக புல்லுருவிகள் தலையெடுக்காமலேபோயிருக்கும். சிறு கதைகள் நவீனங்கள் மூலமாக காமத்தைக் கழிகாமவெறியாகக் காட்டிவரும் குறையானது இப்பொழுது காணப்படுவதைப் போல எக்காலத்திலும் இல்லை என்றே சொல்லிவிடலாம். காதலன் காதலியையோ அன்றிக் காதலி காதலனையோ சந்திக்க நேர்ந்து விட்டால் இனித் தருமம் தலையெடுக்குமா என்ற அச்சம் யாருக்கும் ஏற்படாமலிராது. வயதானவர்களுடைய உள்ளமும் கூடச் சிதறுபடக் கூடியவாறு இன்று அவற்றின் திருப்பணி வலுப்பெற்றுள்ளது.

பூப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப் புறப்பட்டு வருகின்ற அத்தகைய இலக்கிய சிருஷ்டிகள் நம்மை நடுங்கச் செய்கின்றன. நெஞ்சக் கோணல் நிமிரும் என்ற நம்பிக்கையுடன் வாங்கக் கூடிய இலக்கிய வெளியீடுகள் ஒரு சிலவேதான். இலக்கிய உலகில் இன்று காமத்திற்கும், கண்டனத்திற்கும் வசவுக்கும் இருக்கிற செல்வாக்கு மற்றைய நல்ல பொருள்களுக்குக் கிடையாது. ஒருக்கால் வள்ளுவர் பெருமான் மீண்டும் அவதரித்து விதி வழியே அறங் கூறிச் செல்வாராயின் பெரும்பாலும் அவர் தன்னந்தனியே புலம்பிக்கொண்டுதான் செல்லவேண்டும். எத்தனை பேர் அவர் பின் தொடர்ந்து செல்வர் என்பதை ஊகிக்கவும் முடியாத அவ்வளவு அச்சமும் ஐயமும் நல்லோர் உள்ளங்களில் நிலவுகின்றன. ''பேசுவது மானம்---இடை---பேணுவது காமம்'' என்று கும்பகர்ணன் சொல்லுவதுபோல நாமும் ''பேசுவது நீதம்--மனம்---பேணுவது காமம்'' என்று சொல்லலாம்.

காதல்-தத்துவம் மிகவும் அழகானது; அபூர்வமானது; தெய்விகமானது. அதன் மர்மத்தை உணர்ந்தவர் சிலரே. அச்சிலருள்ளும் மிகச் சிலரால்தான் அதன் இயல்பை விரித்துரைக்க முடியும். இவ்வாறு ஒரு சில தத்துவதரிசிகளுக்கே உரிய விஷயத்தைக் கண்டவர் எல்லாம் கையாளத் தொடங்கினால் வரிசை கெட்டுத்தான் போகும், இல்லையா? இன்றைய இளைஞர்கள் நமது செல்வம்; எதிர்கால மன்னர்கள். அவர்களைப்

பேணி வளர்க்கவேண்டும். அந்த வளர்ச்சிக் கேற்ற நற்நிலையை மிக்க கவனத்துடனும் பொறுப்புட னும் அமைக்கவேண்டும். அது நமது கடமை; தவிர்க்கவொண்ணுத் தருமம். ஆனல் நம்மில் எத்துணைப் பேர் இதை உணர்ந்திருக்கிருேம்? விதை நெல்லைக் கஞ்சிக்குப் பயன்படுத்துவதுபோல இளைஞர்களின் நெஞ்சைப் பணயம் வைக்கிருர்களே தவிர பண்புறச் செய்வதாகக் கருத முடியவில்லை'

இலக்கிய ஆக்கத்திற்குரிய தகுதி எவனுக்கு உண்டு? உள்ளத்திலே உண்மை ஒளியை உடைய வன் எவனே, அறங்கடவா நெஞ்சில் அன்பும் பரிவும் கொண்டவன் எவனே, மக்கள் மனத் துவத்தை நன்குணர்ந்த மேதை எவனே, பரந்த மனமும் விரிந்த பாவனையும் உடையவன் எவனே விருப்பு வெறுப்பினைக் கடந்தவன் எவனே' வாழ்வின மதிக்கும் வகைதெரிந்தவன் எவனே, தான் இன்புறுவதை உலகம் கண்டு இன்புற வேண்டும் என்று எண்ணுபவன் எவனே, தான் உணர்ந்தவற்றை மற்றையோர்க்கும் உணர்ந்தத் துடிக்கும் நெஞ்சினன் எவனே, தான் விரும்புவதைச் செம்மையாகவும், தெளிவாகவும், உணர்த்த வல்லவன் எவனே அவனே இலக்கிய கர்த்தா அவனுடைய சிருஷ்டியால் வையம் வளமுறும் அவன் சேவையின் பயனல் தீயோர் எல்லாம் தூயோர் ஆவர். நன்மை பெருகும் நாடுசெழிக்கும்.

இன்று ' நொடிக்கு நூறு ' என்ற கணக்கில் எழுத்தாளர் தோன்றி வருகிருர்கள். அதில் வருத்த மில்லை; பொருமையில்லை. அத்தனை பேருக்கும் வாழ்த்துக்கூறி வரவேற்போம். ஆனல் அவர்களின் சிருஷ்டி நம்மை அவர்கட்கு வணக்கம் கூறும்படி செய்யவில்லையே! அவர்கள் ' பொல பொல ' என உதிர்க்கிருர்களே சிறுகதைகளும், குட்டி நாடகங் களும் அவற்றுள் வெம்பாமல், அழுகாமல், நாருமல் கருகாமல் நல்ல கனியாய் விளங்குபவை எத்தனை? இதயக்கூண்டினுள் கிடந்து ஏங்கும் மர்மங்களை வெளிப்படுத்துபவை எத்தனை? ஆத்ம வேதனையைப் போக்கி ஆறுதல் தருபவை எத்தனை? எலும்பை உருக்கி இதயத்தை அரிக்கும் கவலையைத் துடைப் பவை எத்தனை? சிதறிக்கிடக்கும் மக்களையும், மனத் தையும் சேர்த்து ஒட்டுபவை எத்தனை? நாட்டுப்பண் பாட்டை நல்ல முறையில் காக்கும் ஆற்றல் பெற் றவை எத்தனை? என்னபதில் உரைப்போம்? நெஞ்சு டைந்து ஏங்க வேண்டியது தான், இன வேற்றுமை களையும், பண்பாட்டு வேற்றுமைகளையும் மிகைப் படுத்தி, மிகைப்படுத்தி வேண்டாத-பொல்லாத கற் பனைப் பூதங்களை உற்பத்திசெய்து அச்சம் விளைவித்து நம்மிடத்தில் நமக்கே நம்பிக்கை இழந்துபோகும்படி நாசவழியில் புத்திலக்கியத்தின் போக்கு இருக்கிறது. வேறுபாடுகளை எல்லாம் மாறுபாடாகத் திரித்து மக் கள் மனதில் நஞ்சு பாய்ச்சப்படுகிறது.

இன்று தோன்றியுள்ளவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து உலகச்சந்தைக்கு விற்பனைக்கு அனுப்புகிருேம் என்று வைத்துக்கொள்வோம், நூற் றுக்கு எத்தனை எடுபடும், விலைபோகும் என்பதை எண்ணவே நடுங்குகிறது. கால எல்லையையும் கடந்து கற்பனைக் களஞ்சியமாய் நின்று லட்ச உலகினுக்கு ஏற்றிச்செல்லும் ஞானரதங்கள் போன்ற இலக்கியச் செல்வந்தைப்பெற்றும் அருகிக்கொண்டேவருகிறது, தனிப்பட்ட விருப்பு வெறுப்பின் அடிப்படையில் அரும்பும் பிரசாரரகங்களே பெருகிக்கொண்டு வரு கின்றன. இவற்ருல் தற்காலிகமான கிளர்ச்சிகளை யும், கட்சி வளர்ச்சியையும், தனிப்பட்டோர் பண வருவாயையும் எதிர்பார்க்கலாமேயன்றி நிரந்தர மான பலனையோ எதிர்பார்க்கமுடியாது. இத்த கைய சிறு நோக்கங்களை விடுத்து அழியாத உண்மை யின் நிலை என்ன? அவற்றைத்தழுவி வளரவேண் டிய மக்கள் எங்கே எந்நிலையில் நிற்கிருர்கள்? அவர் களை எந்நெறியில் இட்டுச்சென்ருல் இன்றுள்ள பஞ்சை நிலை மாறிப் பண்பு நிலை உருவாகும் என் னும் விஷயங்களை விருப்பு வெறுப்பற்ற மனத்துடன் அணுகவேண்டும். அவ்வாறு அணுகவல்ல மனப்பண் பும், மதிவலியும், சொல்லாற்றலும் உள்ள இலக் கிய கர்த்தாக்களுக்கே நமது வணக்கம் உரியதாகும் அவர்கள்தான் நாட்டிற்குத் தேவையானவர்கள்.

இன்னெரு குறை என்ன என்ருல் அன்ன நடை பழகப்போய் உள்ள நடையும் பறிபோனதாகும். வெறும் அடுக்குச்சொற்களும் அலங்கார வார்த்தை களும் காலத்தையும், இடத்தையும் பொருளையுமே கொள்ளைக்கொண்டு போய்விடுகின்றன. புத்திலக்கி யங்கள் பல வற்றுள் தமிழ் எழுத்தையன்றித்தமிழ்ப்

பண்பாட்டையோ, தமிழர் நாகரிகத்தையோ அத்தி பூத்தாற்போலத்தான் காண முடிகிறது.

இலக்கணத்தைத் தகர்த்தெறிவதில் வெற்றி பெற்றவர்கள் என்று கருதிக்கொண்டிருப்போர் தமிழ் மரபையும் உடைத்தெறிந்துவிடலாம் என்ற தவருன பாதையில் போய்க்கொண்டிருக்கிருர்கள். இலக்கணம் காலத்தால் மாறலாம் மாற்றப்படலாம். ஆனுல் மரபோ மாருதது, மாற்றப்படமுடியாதது. ஒருவனும் ஒருத்தியும், கணவனும் மனைவியும் என்ற தொடரை ஒருவன்,ஒருவள், ஒருத்தன்-ஒருத்தி என்றே கணவன்-கணவி, மனைவன்-மனைவி என்றே எழுதினுல் அது மொழி வளர்ச்சியாகாது; சீர்திருத்தமும் ஆகமாட்டாது. வரட்டு நடையை சோற்றி மனதில் பதியும் தெளிவான நடையைத் தோற்றுவித்த மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் மரபை அழித்து வக்கிர நடையை சிருஷ்டிக்க முனைந்தால் குளிக்கப்போய்ச்சேற்றில் விழுந்த கதையாய்த்தான் முடியும்.

இப்படிஎல்லாம் நான் சொல்வதால் இக்காலத்தில் போற்றத்தக்க நல்லிலக்கியங்கள் வெளிவரவே இல்லை என்று நான் கூறுவதாக முடிவு கட்டிவிடப்படாது. வைத்தியத்துறையிலும், கணிதத் துறையிலும் மனதத்துவத்துறையிலும், சரித்திரத் துறையிலும், இசைத்துறையிலும் இதுவரை வெளிவராத அளவில் சிறந்த நூல்கள் வெளிவந்திருக்கின்றன. ஆராய்ச்சித்துறையிலும், நிரம்ப வெளிவந்திருக்கின்றன. அவற்றிற்கெல்லாம் நமதுமனம்நிறைந்த பாராட்டுக்கள் உரியனவாகும். அவற்றைத் தனிதனியே இங்கு எடுத்து விளக்கப்புகுந்தால் இது ஒரு சிறு கட்டுரை என்பது மாறிப் பெரிய திறனுய்வு நூலாகிவிடும். இவற்றை எல்லாம் தொகுத்துப்பார்த்தால் வெளிவந்திருக்கும் நூல்களுள் மிகச்சிறிய விகிதாசாரமே பாராட்டுக்குரியவையாகும், இத்தகைய பயனுள்ள, நன்றிபயக்கும் நல்ல நூல்கள் பெருகவேண்டும் என்ற ஆசைபற்றியே எத்தகையநூல்கள் தேவை இல்லை என்பதைக் குறிப்பிடலானேன்.

முடிவாகச் சொன்னுல் எழுத்தாளர்களும்' பதிப்பாளர்களும் கொஞ்சம் அக்கறையும், பெரிய மனமும் கொள்ளவேண்டும்! புத்தக வெளியீடு கேவலம் ரூபா—அணு—பைசாக்கணக்கில் அடங்கும்வெறும் வாணிகம் அல்ல; உரிமையை அறிவுறுத்திக்கடமையில் செலுத்தி மக்களை உருவாக்குவது அது: நன்மையை எடுத்துக்காட்டி தீமையை அடித்து விரட்டி நாட்டினைச் செம்மைப்படுத்துவது அது; மற்றைய நாட்டினர் கண்முன் நம்மை எடைபோட்டுக்காட்டி நமது மதிப்பை அளவிட்டுரைக்கும் அபூர்வக் கருவி அது என்பதை யெல்லாம் நன்ருக நம் மனத்தகத்தில் பதித்துக்கொள்ளவேண்டும். எழுத்தாளர்களும், பதிப்பாளர்களும் சொந்த நன்மையையோ லாபத்தையோ கருதி மற்றையவற்றை மனத்திற் கொள்ள மறந்தாலும், மறுத்தாலும் மக்கள் உறுதியுடன் நின்று நல்லன கொள்ளுவதுடன் அல்லனவற்றை தள்ளுவதில் தயங்கலாது.

இப்படிச் செய்வோமாஞல் இன்று காணப்படும் இழிதகவுடைய நூல்கள் மறைந்து புத்திலக்கிய வரிசையில் உயர்ந்த—உன்னத லட்சியங்களையுடைய பயன்தரத்தக்க நூல்கள் பெருக முடியும். நாமும் நல்லின்பம் துய்க்கலாம். நாடும் நலம் பெறும். வாழ்க தமிழ் மொழி! வளர்க நல்லிலக்கியம்!!




Mani Municipal Maternity Home

மணி நகரசபை மகப்பேறு விடுதி



Erskine (Government) Hospital, Madurai — எர்ஸ்கின் அரசாங்க வைத்தியசாலை, மதுரை



The Municipal Electric Power House, Madurai

நகரசபை மின்சார நிலையம், மதுரை




Royaloo Iyer Municipal Maternity Home
ராயலு அய்யர் நகரசபை மகப்பேறு விடுதி

THE MADURAI MUNICIPAL

# PUBLIC HEALTH ADMINISTRATION

(DR. P. M. RAJARATNAM, Health Officer, Madurai Municipality.)

It is a well known fact that in the evolution of civic administrative functions, the health duties commenced with sanitation. In course of time the rate payer's civic needs increased and he began to press for more and more civic amenities. Eventually the duties of the municipal public health department became manifold. The expansion of the municipal Public Health Department has always been consistent with two primary considerations viz., the financial status of the local body concerned and then the appreciation to public health proposals on the part of the elected representatives. Luckily tradition has it that the Madurai Municipal Council has been abounding in both such that it is in the proud position of being the forerunner among sister local bodies in the State in the P. H. sphere as in others of civic welfare. Here is a brief summary of its activities :—

**Achievements**: About 1935 this Municipality embarked on the Reorganised Scheme of Maternity and Child Health Scheme. To-day it stands the proud distinction of having implemented the Scheme to its letter and spirit. It provides the highest percentage of skilled aid to the mothers at the time of confinement. There are 5 Maternity Homes and 2 Maternity Centres with a total bed strength of 124 and over 70% of skilled aid at the time of labour is rendered annually by the Municipal Agency alone, free of charge.

In 1938 was opened the Public Health Laboratory, the first of its kind in India as a whole. It renders free diagnostic service both in communicable and non-communicable diseases. This institution has a very good record of service in the field of Preventive work.

Madurai was the earliest Municipality to provide protected water to its citizen. The water works at Kochadai were set up in 1893 and then in 1923 the Arapalayam works were opened.

Madurai Municipality was the foremost local body that undertook sewerage work in the City. Long before the the introduction of the Grow More Food Campaign, the Madurai Municipal Council had set up a Sewage Farm about the year 1928 for land treatment of the sewage and had been contributing a mighty share to produce green grass fodder to the milching cattle of this town and its suburbs, production of food crops and supply of sludge manure for agriculture. It was recently extended by about 83 Acres and its present extent is 153 Acres under guinea grass and food crops cultivation.

In April 1949, this Municipality started manufacture of Compost from habitation waste in a depot on Melur Road over 45 Acres in extent. This Municipality produced the maximum by any single Local Body including the Corporation of Madras either in the composite or the residuary States of Madras. 30,000 tons of cheap organic compost manure are prepared annually and sold to the ryots. This accounts for 10% of the States' total production of compost and is appreciated as a model for other Municipalities to follow This Municipality has the biggest conservancy fleet comprising of up-to-date Scammel Mechanical Units with vacuumatic sullage emptiers.

Two years ago, in collaboration with the World Heath Organisation this Council started a Serology Clinic for control of Venereal Diseases infection particularly in pregnant mothers and children. In co-operation with the Municipal Maternity Homes this Clinic has done substantial service in curing congenital venereal infection.

### PROPOLALS

The aboe are the works executed in the past and the Council has many proposals too on hand. Worth mentioning of them are the opening of another Maternity Home with necessary staff to serve the area north of River Vaigai. A central Laundry to launder the municipal maternity home linen is set up and is about to function. Acquisition proceedings are vigorously under way to contruct a modern type ot Slaughter House, a Dhoby Khana and Skins and Hides Depot at Munthriptope, east of the town. Congested labour tenement area like Ponnagaram is to be soon provided with sewer, the proposals being in the stage of finalisation. The Public Health Laboratory is to be soon extended and equipped with the latest type of instruments. Opening of a Dairy farm is engaging serious consideration. The Council has recently sanctioned an Anti-mosquito Scheme at a cost of over Rs. 44,500 and it will soon be put into operation. The long awaited augmentation of protected water supply through Melakkal Water Supply Scheme is at the point of execution. In order to meet the high standards of sanitation which the citizen expect of the Department, propasals to reorganise the existing 19 sanitary divisions into 22 with a Health Assistant to look after Vaccination as well as Vital Statistics Registration tion have been just put up for consideration. This will greatly facilitate vaccination and registration of vital events by the public at offices quite within their reach unlike now. The separation of conservancy from the public health department and handing it over to the Engineering Department has been approved by Government and is pending with Government for orders to appoint the required Assistant Engineers. This will spare the time and services of the health Staff for legitimate public health duties.

This is about that achieved in the past and that awaiting to be achieved in the immediate future. Surely it is not all. As already stated, the problems of the community are too many. The appalling ignorance and indifference to Health principles on the part of the masses are making solution to these

